# கம்பர் வாக்கும், நோக்கும்.



புலவர் ச. கணபதிராமன், எம். ஓ. எல்.,



திருமகள்  நூலகம்,

தூத்துக்குடி.

# கம்பர் வாக்கும், நோக்கும்.



டாக்டர் சி. ராஜகோபாலாச்சாரியார்
டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார்
டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை
டாக்டர் சி. என். அண்ணுதுரை
டாக்டர் தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர்

*ஆகியோர் நோக்கங்கள் பற்றியது.*

திருமகள்  நூலகம்,
தூத்துக்குடி.

# பொருளடக்கம்.

# ஒரு விண்ணப்பம்.

---

கற்றவர் இதயம் களிக்கச் செய்யும் கம்பரது காவியத்தைப் பலநோக்கோடு நோக்கிய பெருமக்களின் கருத்துக்களைப் பிழிந்து தருவது இந்நூல். தமிழ் இலக்கிய உலகில் இது புதிய முயற்சி.

இலக்கியம் எல்லோருக்கும் பொது. இம்முறையில் அனைவருக்கும் பொதுவான கம்பர் காவியத்தை அறிஞர் பெருமக்கள் பலர் பல நிலையிலிருந்து ஆராய்ந்துள்ளனர் அவர்களுள் சிலரது சிந்தனைக் கருத்துக்களை மட்டுமே இந்நூல் திரட்டித்தருகின்றது.

பதிப்பு நோக்கம் என்ற தலைப்பில் உள்ள கட்டுரை ஆராய்ச்சியாளர்களுக்கு உறுதுணை செய்யும் என்று நம்புகின்றேன்

எளியேனது இம்முயற்சியினைத் தமிழகம் வரவேற்கும் என்று எண்ணுகின்றேன்.

இந்நூல் தோன்றுவதற்கும், வெளி வருவதற்கும் எனக்கு உறுதுணை செய்தும் வாழ்த்துப் பாடல் இயற்றியும் தந்த கவிஞர் திரு. பொன்னுசாமி அவர்களுக்கு என்றும் கடப்பாடுடையேன். திருநெறிக் கவிஞர் திரு. ப. ஜெயராஜ் அவர்கள் வாழ்த்துரை ஈந்தமைக்கும், இந்நூலுக்கு வேண்டிய நூல்களைத் தந்துதவிய திரு. P. V. R. பாண்டியன் வித்துவான் தஸ்நேவிஸ் மரியான் ஆகியோருக்கும் நன்றி,

இந்நூலுக்கு அணிந்துரை தந்தருளிய காமராஜ் கல்லூரி முதல்வர் மேன்மைமிகு சா. செல்வராஜ் அவர்களின் அருள் நெஞ்சை என்றென்றும் பொன்போல் போற்றுவதே அன்னாருக்குச் செய்யும் கைமாறாகும். கடிதோச்சி மெல்ல எறியும் பண்புகொண்ட இப்பண்புடையாளருக்கு என்றென்றும் நன்றி

அச்சிட்டுதவிய, அச்சகத்தாருக்கும் வெளியிட்ட நூலகத்தாருக்கும் நன்றி.

அன்பன்,

ச. கணபதிராமன்.

# அணிந்துரை.

நண்பர் திரு. கணபதிராமன் எழுதியுள்ள ''கம்பன் வாக்கும் நோக்கும்'' என்னும் நூலைப் படிக்கின்ற வாய்ப்புப் பெற்றேன் கம்பராமாயணம் மிகச் சிறந்த தமிழ்க் காப்பியம் ஒவ்வொரு தமிழரும் தமது சிறந்த சொத்தாகப் போற்றவேண்டிய பெரும் நூல். அத்தகைய பெருங் காப்பியத்தில் தமிழ் அறிஞர்கள் சிலர் எவ்வாறு ஈடுபாடு கொண்டு பாத்திரப் படைப்பையும், கவிதை இன்பத்தையும் அனுபவித்தார்கள் என்பதை நூல்மூலம் ஆசிரியர் திரட்டித்தருகிறார்.

இராமனுக்குரிய ஆட்சியை பரதனுக்கே வழங்க வேண்டும் எனவும் இராமன் பதினான்கு ஆண்டுகள் கானகம் செல்லவேண்டுமெனவும் தசரத மன்னனிடம் வரம் கேட்டு அதனால் அம் மன்னனது உயிர் போவதற்கும், இராமபிரானுக்குக் கொடிய துன்பங்கள் வந்துறுவதற்கும் காரணமாயிருந்த கைகேயியினை நாம் மிகக் கொடியவளாகக் கருதுகிறோம் ஆனால் டாக்டர் சோமசுந்தர பாரதியார் அவர்கள் கைகேயி கொடியவள் அல்ல. தசரதன் ஏற்கனவே அரசினைப் பரதனுக்குத் தருவதாக வாக்களித்துவிட்டான் - அவ்வாறு வாக்களித்த பின்னர் இராமனுக்கு ஆட்சியைத் தசரதன் கொடுத்தால் தசரதன் சொன்னசொல் காப்பாற்றாத பழிக்கு உரியவனாவான். அத்தகைய பழியினின்றும் தன் கணவனைக் காக்கவேண்டும் என்பதற்காகவே கைகேயி பரதனுக்கு ஆட்சியைத் தரவேண்டும் என்று தசரதனிடம் வரம் கேட்டாள் என்னும் புதிய கருத்தினைப் புலப்படுத்துகிறார்கள். மேலும் ஆட்சியில்லாமல் இராமன் நாட்டிலிருந்தால் நாட்டில் வீண் குழப்பங்கள் ஏற்பட்டு தசரதனுக்கும் இராமனுக்கும் பின் பரதனுக்

குமே கேடுகள் நேரலாம் என்று கருதியும் பரதனுக்கு ஆட்சியைத் தருவதாகச் சொல்லிவிட்டு, இராமன் மீதுள்ள அளவுகடந்த பாசத்தினால் தசரதன் தன்னிலை வழுவியதால் அம்மன்னன் அளப்பரும் மகவாசையைக் குறைக்கவும் மனத்தூய்மை ஏற்று அவா அகற்றவும் சிலகாலம் இராமனின்றும் தசரதனைப் பிரித்துவைத்தல் இன்றியமையாதது எனக்கண்டு கைகேயி இராமன் கானகம் செல்லவேண்டும் என வரம் கேட்டாள் என்றும் டாக்டர் பாரதியார் குறிப்பிடுகிறார். இத்தகைய கருத்துப் புதுமையாகவும் சிந்தனையைத் தூண்டுவதாக வும் அமைகிறது

இவ்வாறு புதிய கோணங்களிலிருந்து பார்க்கும் பல தமிழறிஞர்களின் கருத்துக்களைத் தொகுத்து இந்நூலில் ஆசிரியர் வழங்கியிருப்பதால், அந்த நூற்களிலும் அதன் வழியாகக் கம்பராமாயணத்திலும் ஈடுபாடு கொள்வ தற்கு இந்நூல் தூண்டுகிறது. நல்ல முயற்சி. ஆசிரிய ருக்கு எனது வாழ்த்துக்கள்,

முதல்வர்,
காமராஜ் கல்லூரி,
தூத்துக்குடி.

சா. செல்வராஜ்,
14—8—70.

முக்கனியின் சாறெடுத்து முல்லைத்தே னிட்டதுபோல்
மக்கள் சுவைத்தறிய மாப்பெரிய மேதையரின்
தங்க கருத்தோதும் தண்டமிழ் நூலிதனை
பக்குவமாய் தந்தார் படைத்து!

கம்பரது காவியத்தைக் கற்ற பெரியோரின்
செம்மைக் கருத்ததனைச் சீராக ஆய்ந்தறிந்து
நோக்கம் பலவற்றை நுண்ணிய சொற்கூட்டி
வாக்கால் வடித்தவர் வாழ்க!

— தி. பொன்னுச்சாமி.

---

திருமந் திரநகர் செய்தவப் பயனால்
திருமந் திரங்கள் தினசரி யோதி
கருமம் மீதே கண்ணா யிருந்து
ஒருமனத் துடனே பணிபல புரியும்
சொல்லின் செல்வர் சேதுப் பிள்ளை
சொல்லிய வழியில் செல்லும் செல்வர்
அல்லும் பகலும் காம ராசர்
கல்லூ ரிதனில் தமிழ்ப்பணி புரியும்
நல்லோர் போற்றும் நற்றமிழ்ப் புலவர்
ஒல்லும் வகையான் அறம்பல புரியும்
திருவளர் செல்வன் கணபதி ராமன்
தரும நெறியினைத் தரணிக் களித்த
கரும வீரன் இராமன் கதையை
அருமை யாக அவனிக் களித்த
பெருமை மிக்க கம்பன் புகழை
அருமை யாக அலசிப் பார்த்த
அறிஞர் பலரை அலசிப் பார்த்து
பெருமை யுடனே ஆக்கித் தந்தார்
கம்பன் பெருமை பேசும் நூலாய்
எம்ம னோர்கள் எளிதில் உணர.

ப. ஜெயராஜ்.

# கம்பன் வாக்கு

என்றுமுள்ள தென்றமிழை இயம்பி இசை கொண்ட எண்ணற்ற புலவர்களுள் கவிவேந்தர் என்று போற்றப்படும் கம்பரும் ஒருவர். எவ்வுயிரையும், எவ்வுலகையும் ஈன்றும் எழிலழியாச் செவ்விய கோலத்தோடு இலங்கும் செந்தமிழன்னையின் மணிமார்பில் கலை நலம் சான்ற நல்லணியாகக் கம்பர் தமது இராமாயணத்தைச் சூட்டி மகிழ்ந்தார். நற்றமிழ்ச் சுவையினை நல்ல முறையில் எடுத்துக் காட்டும் கம்பரது இராமாயணமே, கற்றவர் நெஞ்சத்தைக் களிக்கச் செய்வது என்பது கற்றறிந்தோர் வாக்கு. "கனியினும் கட்டிபட்டக் கரும்பினும் இனிது சால, எம் கம்பர் கவிகள்" என்று புலவர் பெருமக்கள் கம்பனது கவிதைகளை வாயார வாழ்த்துவர். சிந்தைக்கும், செவிக்கும் இனிய சுவையினை அள்ளிக்கொடுக்கும் கம்பனது படைப்பான இராமாயணமே, உலகப் பெருங் காவியங்களுள் ஒப்பற்றதாக மிளிர்கின்றது என்று அவைகளை ஒப்புநோக்கி ஆராய்ந்த அறிஞர்கள் உரைப்பர்.

## கம்பருக்கு முன்னும் கதையுண்டு.

கன்னித் தமிழ் மொழியில் காவியக் கோயில் அமைத்த கம்பருக்கு வான்மீகியின் இராமாயணமே முதல் நூலாக விளங்கியது. வான்மீகி முனிவருக்கு முன்பே, இராமாயணம் இந்தியப் பெருநாட்டில் இலங்கியது என்று அறிஞர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர்.

வான்மீகி முனிவருக்கு முன்பே இந்தியப் பெரு நாட்டில் இராமாயணம் இலங்கியது போல், கம்பருக்கு முன்பே தமிழ் நாட்டில் இராமன் கதையும் விளங்கி யிருந்தது. இராமனையும், சீதையினையும், சீதையினைச் சிறையெடுத்த ஐயிரு தலையுடைய இராவணனையும், கடைச் சங்க காலத் தமிழ் மக்களும் அறிந்திருந்தனர். இதனை,

> கடுந்தே ரிராமன் உடன்புணர் சீதையை
> வலித்தகை யரக்கன் வவ்விய ஞான்றை
> நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்.
>
> (புறநானூறு, 378)

> "வெல்போர் இராமன் அருமறை கவித்த"
>
> (அகநானூறு, 70)

> "இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்
> உமையமர்ந் துயர்மலை இருந்தனனாக
> ஐயிரு தலையின் அரக்கர் கோமான்"
>
> (கலித்தொகை 38)

> அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்
>
> (சிலப்பதிகாரம் காதை 13, வரி 65)

என்ற பகுதிகளால் அறியலாம்.

கடைச்சங்க காலத்திற்குப் பின்னர் எழுந்த சில தமிழ் நூல்களும் இராமாயணத்தைப் பற்றிய குறிப்புக்கள் சிலவற்றைக் குறிப்பிடுகின்றன. இவ் இலக்கியக் குறிப்புக்களால் கம்பருக்கு முன்னர் இராமாயணத்தைத் தமிழக மக்கள் நன்கு தெரிந்திருந்தனர் என்பது தெளிவாகின்றது.

தமிழ் வேந்தர்கள் இராமாயணத்தை எடுத்துக் கூறும் பெரியார்களுக்கு நிவந்தங்கள் அளித்துள்ளார்கள். இதனை முதலாம் ராஜாதிராஜனின் முப்பதாவது ஆண்டில் பொறிக்கப்பெற்ற திரிபுவனைக் கல்வெட்டில் வரும் ராமாயணம் வாசிப்பான் ஒருவனுக்கு நெல் இரு தூணிக்கும்'' என்ற தொடரால் தெளியலாம். [இக் கல்வெட்டினைக் கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர் வை. சுந்தரேசவாண்டையார் அவர்களோடு நான் நேரில் சென்று எழுதினேன்.]

### தெரிந்ததைப் பாடுவானேன்

இராமாயணம் தமிழ் மக்களுக்கு நன்கு தெரிந்திருந்தும், கம்பர் ஏன் அதனைப் பாடினார் என்ற வினாவிற்கு அறுதியிட்டு பதில் கூறுவது இயலாது. கம்பர் ''ஆசை பற்றி அறையலுற்றேன்'' என்கிறார்.

தமிழ் மொழியில் கம்பர் இக்கதையினைச் செய்யு முன் [கம்பருக்கு முன்னர் தமிழில் இராமாயணம் ஒன்று இருந்தது என்றும் கூறுவர்] தமிழகத்திலும் வடமொழியான சமக்கிருதத்தில்தான் இராமாயணக் கதை பெரும்பாலும் விளங்கியது. வடமொழி அறிந்த ஒருசில புலவர்களே இக்கதையினை எடுத்துக் கூறி வந்தனர். வடமொழி ஆதிக்கம் பெற்ற காலத்தில் வாழ்ந்த கம்பர் எல்லோராலும் இக் கதை படிக்கப்பட

வேண்டும் என்பதற்காக இதனைத் தமிழ் மொழியில் பெருங்காவியமாகச் செய்திருக்கலாம். வட மொழி பயின்றால்தான் சிறப்பு என்று எண்ணிக்கொண்டிருந்த கம்பர் காலத்தில் வடமொழிக் காவியத்தை அவர் தமிழில் மொழி பெயர்த்தது ஒரு பெரும் புரட்சியே யாகும்.

கம்பர் காலத்தில் சோழ நாட்டில் அரசியல் குழப்பம் மிகுந்திருந்தது. சோழ மன்னர்கள் தங்களுக்குள் பகைமை பாராட்டி மாறுபட்டனர். தக்க தலைவன் இல்லாமையால் சோழநாடு பல இழி செயல்களுக்கு இரையாகியது. இந்த இழி செயல்களைப் போக்க, தாயினிலும் சிறந்த கோயிலில்லை என்ற பண்பை, தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்ற குணத்தை, சிந்தையாலும் பிற மாதரைத் தொடாத சீர்மையினை, கற்பின் நேர்மையினை, அழியாத தோழமையை, அறுப் பரு உடன் பிறப்பை, படைக்கஞ்சா வீரத்தை, பகைவனிடத்தும் கசியும் கருணையினை, எடுத்துக் காட்டும் வண்ணம் இராமாயணத்தைக் கம்பர் பாடியிருக்கலாம்.

எதற்காகக் கம்பர் இராமாயணத்தை எழுதினாலும், தமிழ் மக்களுக்குச் சிறந்த காவ்யக கருவூலம் ஒன்று கிடைத்துள்ளது என்பதை யாரும் மறுக்க இயலாது என்றே கூறலாம.

## கம்பரது உயிரே தமிழ்தான்

வடமொழிக் காவியத்தைத் தமிழ்ப் படுத்திய கம்பரது தமிழ் உணர்வை எடுத்துக்கூற நாலாயிரம் நாவுகளை நான்முகன் படைக்கவில்லை. தண்ணார் தமிழளிக்கும் தண் பாண்டி நாட்டைவிட அண்டர் நாடு

688

என்று கூறப்படும் தேவர்கள் நாடு மேலானதோ, என்று வினவுகின்றார் கம்பர். இதனை,

''அத்திருத்தகு நாட்டினை யண்டர் நாடு
ஒத்திருக்குமென்றால் உரையொக்குமோ
எத்திறத்தினும் ஏழுலகும் புகழ்
முத்தும் முத்தமிழும் தந்துரை முந்துமோ''?
(கிட். ஆறுசெல் படலம், பாட்டு. 55)

என்ற பாட்டால் அறியலாம்.

''என்றும் உள்ள தென்றமிழை இயம்பி இசை கொண்டான்'' என்று அகத்தியனைக் கம்பர் குறிப்பிடு கின்றார். தென்றமிழைக் கற்ற அகத்தியனை நீண்ட தமிழால் உலகை அளந்தவன் என்று பின்னர் நெஞ் சாரப் பாராட்டுகின்றார். இதனை,

,,ஆண்டகைய ரவ்வியினடைந்தமையறியான்
ஈண்டுவகை வேலை துணையேழுலகு யெய்த
மாண்ட வரதன் சரண் வணங்க எதிர்வந்தான்
நீண்ட தமிழால் உலகை நேமியான் அளந்தான்''
(ஆரண்ய. பா. 36.)

என்ற பாட்டால் அறியலாம். தென்மலையான பொதிய மலையிலிருந்து வரக்கூடிய தென்றலைக் கூட ''தண் டமிழ்த் தென்றல்'' என்று கம்பர் சிறப்பித்துப் பேசு கின்றார்.

சீதையின் பேரழகுக்கு உவமை சொல்ல முடியாத கம்பர் பின்னர், செஞ்சொற் கவி இன்பம் என்றே அவளைக் குறிப்பிடுகின்றார். இதை,

"பொன்னின் சோதி போதினில் நாற்றம் பொலிவே
போல்
தென்னுண் தேனில் தீஞ்சுவை செஞ்சொற் கவி
யின்பம்
கன்னிமாடத் தும்பரின் மாடே கழி பேடோ
அன்னம் மாறு முன்றுறை கண்டங் கயல்நின்றார்"

என்ற பாட்டால் அறியலாம். செஞ்சொற் கவியின்பம் செந்தமிழ் இன்ப மன்றோ?

கம்பரது சொல்லமைப்பு:—

கம்பர் தமிழை உயிராகக் கருதிய தன்மையால் தான், தமிழ் மொழியில் புதிய புதிய சொல் அமைப்புக் களை அமைத்து தமிழ்ச் சுவையினைப் பெருக்கினார். கரிய செம்மலாகக் காட்சியளித்த ராமனை "இருட் கனி" என்று இயம்பி உள்ளார். கல்லும் புல்லும் கண்டு உருக "பெண்கனி "நின்றது என்று சீதையைப் போற்று கின்றார். சதகோடி மின் சேவிக்க நின்ற அந்த 'மின் அரசை" "பிரித்த பங்கயம் ஒத்த செங்கனிவாய் ராமன் கண்டான் என்று கவிச்சுவையை இழைத்துப் பாடி யுள்ளார் கம்பர். "அறம் வளர்க்கும் கண்ணாளன்" என்று இராமனைப் போற்றிய கம்பர் "கற்பெனும் பெயர் ஒன்று களிநடம்புரியக் கண்டேன்" என்று சீதையை ஏத்துகின்றார். காமத்தால் எரிகின்ற இராவண னது மேனியினை "நீலத்தார்அரக்கர் மேனி நெய்யின்றி எரிந்த தென்றே" என்று கம்பர் சுட்டிக் காட்டுகின் றார். இக்காலக் கவிஞரான கவிஞர் உளுந்தூர்ப் பேட்டை சண்முகம் காமத்தின் வெம்மையினை இன்பத்தீ என்ற சிறந்த சொல்லால் இதனை அடி ஒற்றியே குறிப்பிட்டிருக்கிறார் போலும். "உண்ணாமல் உயிருண் ணும் ஒரு நஞ்சு" என்று சொல்லப்படும் சீதை இராவண

னது இடரைக் கண்டவுடன் உள்ளத்துக்குள்ளே மகிழ்ந்தாள் என்பதை "கெண்டைத் தடங்கண்ணாள் உள்ளே "கிளுகிளுத்தாள்" என்று கம்பர் மிகச் சிறப்பாக எழுதியுள்ளார். இதனைப் போன்ற இனிய சொற்றொடர்கள் இன்னும் எத்தனையோ கம்பரது காவியக் கோவிலில் உள்ளன.

**சுவைசொட்டும் பாக்கள்.**

சுவையான சொல் அமைப்புக்களைத் தந்த கம்பர் இனிமைச்சுவை சொட்டும் பாக்கள் எத்தனையோ பல வாகப் பாடியுள்ளார். எழுந்த ஞாயிறு விழுவதன் முன் எழுநூறு கவிகள் பாடிய அவரது பாக்களில் இனிமைச் சதங்கை கலிர் கலீரென்று எப்பொழுதும் ஒலித்துக் கொண்டிருக்கும்.

நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரம் நயனம் வேண்டும்
கொம்பினைக் காணும் தோறும் குரிசிற்கு மன்ன தேயாம்
தம்பியைக் காண்பின் என்பார் தவமுடைத்து உலகமென்பார்
இம்பரிந் நகரிற்றந்த முனிவனை இறைஞ்சுமென்பார்

பேரழகில் சிறந்த நம்பியான இராமனுக்கும் நங்கையான சீதைக்கும் திருமணம் நிகழ்ந்தேறியது. அனைவரும் மிதிலைமாநகர் நீங்கி அயோத்தி நகருக்கு வந்தனர். கவின்பெறு காதலர்களாகிய இராமனும், சீதையும் களித்து மகிழ்ந்தனர். இராமனுக்கு மணிமகுடம் சூட்டும் நாள் வந்தது. ஊழ் வினை உறுத்து வந்து ஊட்டியதால்,

"மன்னவன் பணியன்ருகில் நும்பணி மறுப்பேனே? என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றது அன்ரு?
என்னினி யுறுதியப் பால் இப்பணி தலைமேற் கொண்டேன்
மின்ஞெளிர் கானம் இன்றே போகின்றேன் விடையும் கொண்டேன்"

என்று சீதையோடும், இலக்குவனேடும் இராமன் கானகம் சென்ருன். இராவணனுல், சிறை யெடுக்கப் பெற்ற சீதையினை, அனுமான் கண்டு,

"விடினது அன்று அறன் யானும் வீகலேன்
தேடினேன் கண்டனென் தேவியேயென
ஆடினன் பாடின் ஆண்டு மீண்டும் பாய்ந்து
ஓடினன் உலாவினன் உவகைத்தேனுண்டான்"

இவ்வாறு களித்துப் பாடி, கமலக் கண்ணனை இராமனிடம் செய்தி கூறி சமர் ஆற்றி, இராவணனை வீழ்த்த உறுதுணை செய்தான். முக் கோடி வாழ் நாளும், முயன்றுடைய பெருந் தவமும் கொண்ட இராவணன், வீழ்ந்தவுடன், வண்டமர் ஓதி என்னும் (இந்த அழகிய பெயரை மண்டோதரி என்று இன்று உலகம் வழங்கி வருகின்றது) இராவணனது தேவி,

வெள்ளெருக் கஞ்சடை முடியான்
வெற் பெடுத்த திருமேனி மேலும் கீழும்
என்ளிருக்கும் இடமின்று
உயிரிருக்கும இடம் நாடி யிழைத்தவாறே
கள்ளிருக்கும் மலர்க் கூந்தற்
சானகியை மனச் சிறையிற் கரந்த காதல்
உள்ளிருக்கும் எனக் கருதி
உடல் புகுந்து தடவியதோ ஒருவன் வாளி

என்று அலமந்து அழுது ஆவி துறந்தாள். சிறை யிருந்த செல்வியை மீட்டிய செங்கமலக் கண்ணன்,

''அரியணை அனுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்த
பரதன் வெண்குடை கவிக்க
இருவரும் கவிரி வீச
விரை செறிக்குழலி ஓங்க
வெண்ணெய்யூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி.''

முடி புனைந்து மூவுலகும் போற்ற வாழ்ந்தான் என்று முத்தமிழ்க் கவிஞரான கம்பர் இராம காதையினை முடிக்கின்றார்.

கம்பர் பெருமான் பாடியுள்ள பத்தாயிரத்துக்கு மேற்பட்ட பாக்களிலும் எதை விடுவது, எதைத் தொடுவது என்ற நிலையே தெரியா வண்ணம் இரண்டு மூன்று அமுதக் களஞ்சியங்களை மட்டும் எடுத்துக் காட்டி இராம காதை முடிக்கப் பெற்றது. அயோத்தி நகர் வருணனை, அழகெல்லாம் ஒருங்கே கொண்ட இராமனது வாய்மொழிகள், அன்னை சீதையின் அருள் வாக்குகள், வில்லை யூன்றிய கையொடும் வெய்துயிர்ப் போடும் விளங்கிய இலக்குவனது வீரமொழிகள், தள்ளரிய பெரு நீதித் தனியாறுபுக மண்டும், பள்ளமெனும் தகையனான பரதனது பக்தி மொழிகள், இராவணனது முழக்கங்கள் அனுமனது வாய்மொழிகள், வண்டமர் ஓதியின் அறவுரைகள், செஞ்சோற்றுக் கடன் கழித்த கும்பகர்ணன் கூற்றுக்கள் இன்னும் எத்தனை எத்தனையோ பகுதிகளில் கம்பர் சொற் சிலம்பு ஆடியிருக்கின்றார்.

அவற்றை எல்லாம் சொன்னாலும் வாய் மணக்கும் கேட்டாலும் செவி மணக்கும். இத்தகைய செழுந்தேன் குடங்களை அள்ளிச் சொரிந்த கம்பரைப்பற்றிய வரலாறு இதுவரை தமிழ் மக்களுக்குத் தெளிவாகக் கிடைக்க வில்லை. பொன் திணிந்து புனல் பெருகும் பொன்னி நாடான சோழநாட்டில் இலங்கும் திருவழுந்தூரில் கம்பர் பிறந்தார் என்று கூறுவர். சடையப்பர் என்ற புரவலரால் கம்பர் புரக்கப் பட்டு போற்றப் பெற்றார். எக்குடியில் பிறந்தார் என்று தெரியாத கம்பரை அந்தணர்கள் வேளாளர்கள், நாடார்கள், உவச்சர்கள் தங்கள் தங்கள் குடியிலே கம்பர் பிறந்தார் என்று வீண் பெருமை பேசி பொழுதைக் கழிக்கின்றனர். ஏகம்பர் என்ற சிவபெருமானது திருப் பெயரைக் கொண்ட கம்பர் சிறந்த தமிழ்க் குடியில் பிறந்தார் என்பதை மட்டுமே நாம் கொள்ளவேண்டும்.

தன்னைப்பற்றி ஒரு பேச்சும் பேசாது ஒரு பெருங் காவியத்தையே எழுதிய கம்பரை அவரது பாத்திரப் படைப்புக்களை இறைமை நோக்கோடு நோக்கிய மூதறிஞர் ராஜாஜியின் கருத்துக் களை இனிக் காண் போம்.

---

# நோக்கு

## இறைமை நோக்கம்

தண்ணார்ந்த தமிழ்த் திருநாட்டில் அரும்பிப் பண்ணார்ந்த பாரத மணித் திருநாட்டில் மலர்ந்து உலகப் பெரு நாடுகள் அனைத்திற்கும் அறிவு மணத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும் மாமுனிவர் ராஜகோபாலாச்சாரியாரின் சிந்தனைப் பண்ணையிலிருந்து தோன்றிய எத்தனையோ பல புத்தகப்பூக்களுள் இராமாயணத்தைப் பற்றிய பூக்களும் உண்டு. அவற்றுள் தலைமை சான்ற முடி மணியாய் இலங்குவது சக்கரவர்த்தி திருமகன் என்னும் திருநூலாகும். வான்மீகி இராமாயணத்தைப் பின்பற்றியே எழுதப்பட்டிருக்கும் இந் நூலைக் கம்பரைப் பற்றிய நோக்கம் என்ற இந்நூலுக்கு எடுத்துக் கொள்ளுவதும் இயல்புடையதாகும்.

### இரு சக்கரவர்த்திகள்:—

அரசியலில் ஈடும் இணையும் இன்றித் தன்னேரில்லாத் தலைமகனாக இலங்கி, சக்கரவர்த்தி என்னும் பெயர் பெற்ற ராஜாஜி அவர்கள் தமிழ் இலக்கிய உலகில் சக்கரவர்த்தி என்ற பெரும் பட்டத்தைப் பெற்ற கம்பரது கவி நயங்களை நுண் மாண் நுழை புலத்தோடு ஆராய்ந்து அருமையான கருத்துக்கள் பலவற்றைத் தம்முடைய சக்ரவர்த்தி திருமகன் என்னும் நூலில் வெளியிட்டுள்ளார்கள். கம்பரது கலை நலங்களில் மகிழ்ந்த ராஜாஜி அவர்கள் ''கம்பருடைய பாட்டுக்கள் ஒவ்வொன்றும் எதுகையும் மோனையும் சந்தமும் கலந்து பளிச்சுப் பளிச்சென்று ஆபரணங்களைப் பூண்ட மங்கை

யின் ஆடலைப் போல் மின்னித் துள்ளி நடனமாடுகிறது. தெய்விக அவதார விஷயத்தை வைத்து உண்டாகும் உணர்ச்சியுடன் நடனச் சுவையும் கலந்து கம்பருடைய ராமாயணம் பேரழகு அடைந்து விடுகிறது'' என்று குறிப்பிட்டுள்ளார்.

## அங்கு இல்லை இங்கு ஏன்?

தெய்விக அவதார விஷயத்தைக் கம்பர் எவ்வாறு குறிப்பிட்டுள்ளார் என்பதை ராஜாஜி நோக்கிய நோக்கத்தினை இனிக் காண்போம்.

இராமாயணத்தின் தலைவனாக இலங்கும் இராமனை, கம்பருக்கு முன் இராமாயணத்தை எழுதிய வான்மீகி இறைவனது அவதாரமாக வைத்து எழுத வில்லை. சிற்சில பகுதிகளில் மட்டுமே இறைவனது அவதாரச் செய்திகளை வான்மீகர் குறிப்பிட்டுள்ளார். இதனை, ''வான்மீகத்தில் காணப்படும் இராமன் சிறந்த ராஜ குமாரன். வீர புருஷன். அபூர்வமான தெய்விக நற் குணங்களைக் கொண்டவன். அம் மட்டே. கடவுளாக வேலை செய்யவே இல்லை.'' என்று குறிப்பிட்டுள்ளார்.

வான்மீகர் இவ்வாறு கூறியிருக்கக் கம்பர் மட்டும் ஏன் இராமனைத் தெய்வம் என்று வழிபட்டார் என்பதற்கு ராஜாஜி அவர்கள் சிறந்த கருத்தனைக் குறிப்பிட்டுள் ளார்கள்.

''வான்மீகர் காலத்தில் இராமனை அவதாரம் என்று கூறும் கொள்கை மக்களது நெஞ்சத்தில் ஓரளவுதான் இருந்தது. இவர் இராமாயணத்தை இயற்றிய பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர்தான் கம்பர் ராமாயணம் பாடினார். இவ் இடைவெளிக்குள் இராமன் திருமாலின்

அவதாரமே என்ற கொள்கை நாட்டில் நன்ருக வேரூன்றி விட்டது.'' ''கம்பர் காலத்துக்கும் சூழ் நிலைக்கும் தக்கவாறும், இராமன்பால் பக்தி கொண்ட பான்மையாலும் இராமனை மானிடப் பிறவியில் அடைக்காமல் இராமன் திருமாலே கடவுளே, அனைத் திலும் பரவிநிற்கும் பரம் பொருளே என்று குறிப்பிடு கின்ருர்'' என்று ராஜாஜி கூறியுள்ளார் பல்வேறு இடங்களில் இராமனைத் தெய்வத்தின் திருவவதாரமாகக் குறிப்பிட்ட கம்பர்.இராமனது எதிரியான இராவணனின் மனைவி வண்டமர் ஓதியின் வாயிலாகவும்,

''ஆராவமுதாய் அலைகடலிற் கண்வளரும்
நாராயணனென்றிருப் பேனி ராமனை நான்
ஓராதே கொண்ட கன்ருய் உத்தமனுர் தேவிதனைப்
பாராயோ நின்னுடைய மார்பகலம் பட்ட
வெலாம்''

என்று எடுத்துக் காட்டியுள்ளார்,

## மன்பதை போன்றதா தெய்வம்?

இராமன் தெய்வத்தின் திருவவதாரம் என்ருல், ஒரு மானிடனின் செயல்கள் அவனிடம் காணப் படு வானேன்? சீதையைப் பிரிந்தபோது, மனிதர்களை விடத் துயர்கொண்டு, புலம்பிப்புரண்டு அழுவதேன்? என்பன போன்ற வினுக்களுக்கு மூதறிஞர் ராஜாஜி அவர்கள் மிகச் சிறப்பாக விடை கூறியுள்ளார்கள். ''தெய்வமே யாளுலும், அவதார உடலினுடைய தருமத்தின்படி துக்கப்படுதலும் மற்றும் பலவும் நடக்கும்.'' என்பது அவர்களின் முதுமொழி. இராமன் இவ்வாறு வேதனை யால் துவண்டு துடித்ததன்மைக்கு ஏசுபெருமானை ஒப்பிட்டுக்காட்டியுள்ளார், ''அவதார புருஷனுன

ராமன் துக்கம் வந்தபோது மனம் தளர்ந்து புலம்புவது உலகில் மற்றொரு குலத்தார் பூஜிக்கும் அவதார புருஷனை ஏசுநாதரைப் பற்றிக் கிறிஸ்து புராணத்தில் சொல்லியிருப்பதோடு ஒப்பிட்டுக் கவனிக்கத்தக்கது. சிலுவையில், தூக்கி ஆணிகள் அடித்து மாட்டப்பட்டு வெகு நேரம் அந்த நிலையில் தவித்து முடிவில் உயிர் போகும் போது ''ஏலோய் ஏலோய் லாமா சபக்தானி'' என்று ஏசுநாதர் உரத்தகுரலில் புலம்பி உயிர்நீத்ததாக எழுதப் பட்டிருக்கிறது.

அவதாரங்களில் இன்றியமையாத ஒரு பொது இலக்கணத்தை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். தான் தெய்வமே யானாலும் அவதார உடலினுடைய தருமத்தின் படி துக்கப் படுதலும் மற்றும் பலவும் நடக்கும். (சக்கரவர்த்தி திருமகன் பக்கம் 382 ... 388 )

**தத்துவ விளக்கம்:—**

சீதை சிறை யெடுக்கப்பெற்ற செய்திக்கும் இராமன் வருந்தும் நிலையினுக்கும் அழகான தத்துவப்பொருளோடு விளக்கம் தருகின்றார்கள் ராஜாஜி அவர்கள். ''ஒரு ஆன்மா வழி தப்பிப் போனால் பகவானுடைய திருவுள்ளம் எந்த அளவில் துன்பப்படுகிறது என்பதைச் சீதா வியோகத்தில் சித்தரிக்கப் பட்டிருக்கிறது, என்று வைத்துக் கொள்ளலாம்.'' என்பது அவர்களின் கருத்து. இங்கே ஆண்டவனாகக்குறிக்கப் பெறுவது இராமன். ஆன்மாவாகச் சொல்லப் பெறுவது சீதை.

**பெண்களின் பெருந் தெய்வம்.**

திருமாலின் திருவவதாரமாக இராமனை வழிபடுவது போல் திருமகளின் அவதாரமெனச்சீதையை வழிபடுகி

றோம், இதனை ''பிராட்டி ஆண்டவனுடைய கருணை தத்துவத்தின் மூர்த்தியாவாள். அந்தக் கருணையின் வடிவமே ஆண்டவன் மார்பில் இடம் பெற்றிருப்ப தாகக் கொண்டு மகாவிஷ்ணுவைப் பக்தி செய்கிறோம்'' என்று எடுத்துக் காட்டியுள்ளார் ராஜாஜி

திருமகளின் அவதாரமாகத் தோன்றிய சீதையைச் செஞ்சொற் கவியின்பம் என்று போற்றுகின்றார் கம்பர். செந்தமிழ்ச் சுவையாக இலங்கிய சீதையை

''உழுகின்ற கொழு முகத்தின்
உதிக்கின்ற கதிரின் ஒளி
பொழிகின்ற புவி மடந்தை
உரு வெளிப் பட்டெனப் புணரி
எழுகின்ற தெள்ளமுதோடு
எழுந்தவளும் இழிந்தொதுங்கித்
தொழுகின்ற நன்னிலத்துப்
பெண்ணரசி தோன்றினள்''

என்று கம்பர் சிறப்பாகப் பாடியுள்ளார். சுவை நலம் சான்ற இப்பாட்டில், கம்பரது கவிகளில் விளங்கும் தனிப் பண்பான மொழிச்சிக்கனமும் பொருள் அடர்த்தி யும் பொருந்தித் திகழ்கின்றன என்று ராஜாஜி எடுத்துக் காட்டியுள்ளார்.

பெண்ணரசியான சீதை தோன்றியதால் பேண நோற்றது மனைப்பிறவி என்று பெருமையோடு பேசு கின்றார் கம்பர். பெண்மைக் காப்பினைக் காக்க வந்த பெருந்தெய்வமாக வந்த சீதை, இராவணனால் சிறை யெடுக்கப் பெற்று பெருந்துயர் கொண்டாள். சீதை. உலகம் வாழக்குறிப்பாக பெண் குலம் பெருமையோடு

வாழச் சிறைப்பட்டு, துயரப்பட்டாள். பெண்ணினத்தின் திலகமாக விளங்கும் சீதையின் வரலாற்றைத் தாய்மார்கள்தான் முழுமையாக உணரக் கூடியவர்கள் என்னும் கருத்தை ''ஆதி கவிஞர் எழுத்திலும் கம்பர் பாட்டிலும் சீதா சரித்திரத்தைப் பொருத்த மட்டில் தாய்மார்கள்தான் முழுக் கருத்தை உணர்வார்கள்'' என்று ராஜாஜி குறிப்பிடுகின்றார்கள்.

திருமாலும் திருமகளும்.

உலகின் நன்மைக்காக நோன்பு நோற்ற சீதையின் தெய்வப் பேராற்றலை' தேவியின் அருள் இருக்கப்பயம் என்பது கிடையாது. எந்தப் பாவியும் பிராட்டியின் பொன்னடியை அடைந்து உய்வு பெறலாம்'' என்றும் பிராட்டி ஆண்டவனுடைய கருணைத்தத்துவத்தின் மூர்த்தியாவாள்; அந்தக் கருணையின் வடிவமே ஆண்டவன் மார்பில் இடம் பெற்றிருப்பதாகக் கொண்டு மகாவிஷ்ணுவை பக்தி செய்கிறோம்'' என்று ராஜாஜி அவர்கள் குறிப்பிடுகின்றார்.

சீதை மகாவிஷ்ணுவின் மனைவியான திருமகள். திருமகள்தான் தியவர்களை அழிக்க மண்மீது பிறந்தாள். இந்தத் திருமகளை வணங்கினால் நமக்கு நல்லனபலவும் உண்டு எனற கருத்துப்பட 'பிராட்டியைத் தியானிப்போமாக; நம்முடைய பிழைகள் அதிகம். அவளுடைய கருணையின்றி நமக்குக் கதியில்லை. ''குற்றம் செய்யாதார் எவர்தாம்''? என்று கேட்ட அவள் நம்மையும் காப்பாள் என்று ராஜாஜி அவர்கள் நம்மையும் வணங்கச் செய்கின்றார்கள்.

கைகேயி.

சீதையின் துயருக்குக் காரணமாக இலங்கியவள் தசரதனது காதல் மனைவி கைகேயி உருவிலும் திருவிலும்

நிகரற்று விளங்கிய நீர்மையள். நீலமேனி வண்ணனை இராமனை உயிரினும் சிறந்தவனென எண்ணி வளர்த்த இயல்பினள். ஈரைந்து மாதம் சுமந்து ஈன்றெடுத்த தனது மைந்தன் பரதனை விட இராமனையே இவள் நெஞ்சார நேசித்து வந்தாள்.

"இராமன் கோமுடி சூடுவன் நாளை" என்று மந்தரை வாய்க்கேட்டதும், தேய்விலாமுகமதி விளங்கித் தேசு உறமிக உவகைபோய்ச் சுடர்க்கு எலாம் நாயகம் அனையதோர் மாலையை, செய்திகூறிய மந்தரைக்கு மகிழ்வோடு அளித்தாள்.

இராமன்பால் இத்தகை பேரன்பு கொண்ட கைகேயியே இராமன் காடேகக் காரணமாக இலங்கினாள் என்று இராமாயணம் கூறுகின்றது. கைகேயின் இம் மன மாற்றத்திற்குக் காரணம், மந்தரையே, என்று முதறிஞர் மொழிந்துள்ளார். "மந்தரை கைகேயினுடைய உள்ளத்தைக் கெடுத்துத்தன் ஆலோசனைக்குச் சம்மதிக்கச் செய்துவிட்டாள். மொத்தத்தில் கைகேயினுடைய சுபாவம் சாதாரண ஸ்திரி சுபாவம். நல்ல உணர்ச்சியும் பண்பாடும் உண்டு. கூர்மையான புத்தியும் உண்டு. ஆனால் லோக விவகாரம் அதிகமாக அறிந்தவளல்ல. பிடிவாதம் அதிகம். எளிதில் ஏமாற்றப்பட்டாள்" என்பது கைகேயினைப் பற்றிய ராஜாஜியின் கருத்து

## பழுதற்ற பரதன்.

கைகேயின் திருவயிற்றில் பிறந்தவன் பரதன். "இராமாயணப் பாத்திரங்களில் பரதனைப் போன்ற ஒரு பரிசுத்த விக்கிரகம் வேறு இல்லை" என்று குறிப்பிட்டுள்ளார் மாமுனிவர் ராஜாஜி.

தாயின் உதவியால் பெற்ற தரணியை தீயென விலக்கி கமலக்கண்ணனைத் தேடிக் காட்டுக்குச் சென்ற பரதனை கங்கையிரு கரையும் கணக்கிறந்த நாவாயும் கொண்ட குகன் காண்கிறான். ஒருமை உணர்வு கொண்ட இருவரும் உளங்கலந்த நண்பர்களானார்கள் குகன் பரதனோடு வந்த தாயார்களை நோக்கி யார் யார் என்று வினவுகின்றான். தாயார்களை அறிமுகம் செய்கின்றான் பரதன், தன்னை ஈன்றெடுத்த தாயினையே,

''படரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்கும்
செவிலியைத் தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும்
உயிர்ப்பாரம் குறைந்து தேய
உடரெலாம் உயிரிலா எனத்தோன்றும்
உலகத்தே ஒருத்தி என்றே
இடரிலா முகத்தாளை அறிந்திலையேல்
இந்நின்றாள் என்னை ஈன்றாள்''

என்று அறிமுகம் செய்கின்றான். இந்த அறிமுகப்படலத்தைப் பற்றி மூதறிஞர் ராஜாஜி ''தாய்மார்களை இனம் காட்டும் இந்த நிகழ்ச்சியைக் கம்பர் இடம் மாற்றி வெகு அழகாகக் குகப்படலத்தில் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டார். குகன் பணிவுடன் விசாரிக்க பரதன் ஒவ்வொருவராகச் சொல்லி அறிமுகப் படுத்துகிறான் பரத்வாஜ்ரிஷி ஆசிரமத்தில் நடந்ததாக வால்மீகி சொல்லும் நிகழ்ச்சியைக் கவிக்கண்ணால் பார்த்து அதன் சரியான இடம் எங்கே என்று கண்டு. கொண்டு அமைத்து தம் அசாதாரணத் திறமையோடு கம்பர் பாடியிருக்கிறார்' என்று மொழிந்துள்ளார்.

குகனையும் முனிவர்களையும் கண்டு, பின்னர். காட்டில் கடல் வண்ணனையும் கண்டு கண்ணீர் அருவி

பாய கசிந்து உருகி கமலத்தோன் கமலத்தாள் பற்றி நாடு திரும்பவேண்டினன். ஆனால். இராமன் நெஞ்ச முருக. தம்பியை. வாரியணைத்து ' தம்பி. நான் உனக்கு தந்த நாடாகவே எண்ணி தந்தை சொற்படி நட'' என்று ஆணையிட்டதும். அடிகளை முடியிற் பெற்று. அயோத்தி நகருக்குத் திரும்பி அருகிலுள்ள நந்திக் கிராமத்தில் அமர்ந்து அரசாண்டு. பின்னர் இராமன் திரும்பி மணிமுடி தரித்ததைக் கண்டு உள்ளம் மகிழ்ந்தான்.

இவ்வாருகப் பழுதற்ற பாத்திரமாகப் பரதனைச் சித்தரித்துக் காட்டியுள்ளார் ராஜாஜி அவர்கள். தமது நூலை முடிக்கும்பொழுதுகூட ' ஆண்டவனே தன் கருணமூர்த்தியான பிராட்டியையும் கூடஅழைத் துக் கொண்டு மக்களோடு சமமாக மானிடர்களாக அவதரித்து அந்த இன்ப துன்பலீலையை முற்றிலும் ஆடிக்காட்டி யிருக்கிருன் ராமாயணத்தில்'' என்று கூறி முடிக்கின்ருர்.

இதுவரை சக்கரவர்த்தி திருமகனில். இராமனையும். சீதையையும் தெய்வங்களாக நோக்கிய நோக்கத்தினை ஒரு சிறிது மட்டும் கண்டோம். இந்நோக்கத்தைத் தவிர. தமது நூலில் கம்பரது கவிதை ஆற்றலையும். கற்பனை வளங்களையும் ஆங் காங்கே வாயாரப் புகழ்ந்து சென்றுள்ளார்கள். கம்பசித்திரம் என்ற பகுதியில், சூர்ப்பனகைப்படலத்தில் அமைந்துள்ள சுவை சொட்டும் பாக்களை எடுத்துத் தந்திருப்பது சிறப்பாக உள்ளது ''வால்மீகியால் சுருக்கமாகச் சொல்லப் பெற்ற சூர்ப்பனகை வரலாற்றைக்கம்பர் ஒரு தனி நாடகமாக்கி அதில் எல்லா வித ரசங்களையும் தீட்டியிருக்கிருர்.

சூர்பனகைப்படலம் கம்பராமாயணத்துக்குள் ஒரு தலை சிறந்த படலம்''. என்பது ராஜாஜியின் கருத்து.

இங்ஙனம் சுவை சொட்டும் பாக்களைச் சுவைத்து அவற்றிற்கு ஒரு தெய்விக ஆற்றலைக் கொடுத்த ராஜாஜி. கம்பராமாயணத்தின் அயோத்தியா காண்டத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து உலகெலாம் கம்பரது பெரும் புகழைப்பரப்பி வருகின்றார்கள்.

இனி இராமாயணப் பாத்திரங்களை எதிர் நோக்கோடு நோக்கிய டாக்டர் சோமசுந்தர பாரதியின் நோக்கத்தினைப் பற்றிக் காண்போம்.



# ௨. எதிர்நோக்கம்.

நாவீறுபடைத்தடாக்டர் சோமசுந்தரபாரதியாரை பாவீறு படைத்த நக்கீரர் என்று தமிழுலகம் போற்றிப் புகழும் நற்றமிழ்ச் சொற்றிறம் படைத்த இந் நக்கீரர் வாழையடி வாழையாக வீரம் விளைவிக்கும் நெல்லை நாட்டைத் தாயகமாகக் கொண்டவர் அதோடு. எதனையும் கூர்த்த அறிவோடு சீர்தூக்கிப்பார்த்துக் குறை நிறைகளைக்கூறிக் கொற்றம் செலுத்தும், கொற்றவர் குடியில் பிறந்தவர்.

இவற்றால், இவரது வாழ்வில் என்றும் வீரமும், குறை நிறைகளைக் கூர்ந்து ஆராய்ந்து கூறும் பண்பும் நின்று நிலவியன.

எதிர்நோக்கம்.

இப்பண்புகள் இவர்களிடம் சிறந்து இலங்கியதால் தமிழுலகம் பெற்ற பயன்கள் பலப்பல. அவற்றுள் ஒன்று இராமாயணத்தை இவர்கள் நோக்கிய எதிர் நோக்க முறை. இராமாயணத்தை இவர்கள் எதிர் நோக்க முறையில் நோக்கியதால் எல்லோராலும் தூற்றப்படும் கைகேயி போற்றப் படுகின்றாள், பல்லோராலும் புகழப்படும் தசரதன் எல்லோராலும் இகழப் படுகின்றான்,

இவ் எதிர் நோக்க முறைக்கு டாக்டர் பாரதியார் அவர்கள் வான்மீகத்தைப் பெரிதும் ஆராய்ந்து துணை கொண்டார்களெனினும் கம்பரது கருத்துக்களையும் நுண்மாண் நுழை புலத்தோடும் சட்ட நுணுக்கத் தோடும் ஆய்ந்து அரும்பெரும் கருத்துக்களை வெளி

யிட்டுள்ளார்கள். சிறந்த கருத்துக்களை வெளியிட்ட பாரதி. ''நான் கண்டதே துணிந்த முடிவு என்னும் கொள்கையுடையேனை இல்லை. எனக்குத் தோன்றியதை வெளிப் படுத்துவதன் மூலம் என்னில் தகவுமிகவுடைப் புலவர்தம் பேராராய்ச்சியின் நன் முடிவுகளை வெளிப் படுத்தித் தமிழுலகுக்கு. உபகரிப்பதோடு, கற்றூர் பலரையும் ஆழச் சிந்திக்கத் தூண்டுவதே என் முக்கிய நோக்கம். இந் நோக்கமே இத்தகைய ஆராய்ச்சிகளில் என்னை ஊக்குவதோடு எனக்குத் தோன்றியதை வெளிப் படுத்தவும் தூண்டுவதாம்'' (தசரதன் குறையும் கைகேயி நிறையும். பக்கம் 22.) என்று அவையடக்கமாகக் கூறி கைகேயினைப் பற்றிய தமது கருத்துக்களைக் கம்பர் வழியில் நின்று கூறியுள்ளார், இனி அதனைக் காண்போம்.

## கவினுர் கைகேயி.

கேகய நாட்டு மன்னனது திருமகளான கைகேயி தசரதவேந்தனது காதல் மனைவி, எண்ணில் கோடி இராமனுக்கு இணையாக இலங்கும் பண்பினைக்கொண்ட பரதனை ஈன்றெடுத்த மெய்மையாள், மூவுலகும் ஈன்ற முதல்வனுன இராமனைத் தனது மூத்த மகன் என்றே அழைத்து அவன்பால், ஆருத அன்புகொண்ட பண்புடையாள்.

அன்பாலும் பண்பாலும் சிறந்த கைகேயி, தனது கணவனது நல்வாழ்வில் எப்பொழுதும் நாட்டம் செலுத்திய நங்கையாகத் திகழ்ந்தாள். கணவனை நிழல்போல் காத்து அவனுக்குத் தோன்ருத் துணையாய்த் துலங்கினுள். சம்பரன் என்னும் மன்னனேடு தசரதன் போர் செய்து புண்பட்டுத் தேரில் மயங்கி விழுந்தகாலை, புண்பட்ட தசரதனைப் புரந்து தன்னுடைய உயிரைத்

தூசென எண்ணி இரவு முழுவதும் அவனைத் தேரில் வைத்தே பேணிக் காத்த பெருமையுடையவள். செயற்கரிய இவளது செயல்களைக் கண்டு சிந்தை மகிழ்ந்த தசரதன இவளுக்கு வரங்கள் அளிக்க முற்பட்டான். வேண்டும் பொழுது இரண்டு வரங்களைப் பெறுவேன் என்று கூறி இமைபோல் கணவனைக் காத்து வந்தாள்.

## நாடு பரதனுக்கே உரியது.

கைகேயியை தசரதனும் உளமாரக் காதலித்துக் களித்து வாழ்ந்தான். காலம் காற்ருகக் கடிது சென்றது காகுத்தன்க்கு மணி முடி சூட்டும் திருநாளும் வந்தது.

புலவர் பாடும் புகழ் அமைந்த புண்ணியத் திருமகனுன இராமனுக்கு மணிமுடி சூட்டும் திருநாள் மறுநாளே என்ற பறையொலி நகரமெங்கும் எழுந்த போது நகரமக்கள் களிப்பென்னும் கடலில் மூழ்கித் திளைத்தனர். மக்களது மகிழ்வினைக் கண்டாள் மந்தரை என்னும் கூனி, இவள் கேகய மன்னனுல் கைகேயிக் குத் துணையாக அனுப்பப் பெற்றவள். கைகேயிக்கு செவிலித்தாயைப் போன்றவள். இராமனுக்கு மணிமுடி சூட்டப் போகின்றனர் என்பதை அறிந்த இவளது கண்ணும் நெஞ்சும் கறங்கு போல் சுழன்றன. அகம் கொதிக்க முகம் கறுக்க கனல் பறக்க கைகேயியின் மாளிகைக்குச் சென்று இராமன் மணிமுடி சூட்டும் திருநாள் மறுநாளே என மொழிந்து பட்டத்துக் குரியவன் பரதனே என்று அவளிடம் சுட்டிக் காட்டினுள்.

கைகேயியின் திருமகனுன பரதனே பட்டத்திற் குரியவன். தசரதன் கைகேயியை மணந்தபோது, அவள் வயிற்றில் பிறக்கும் மைந்தனுக்கே தனது

நாட்டைக் கொடுப்பேன் என்று கைகேயியின் தந்தை கேகயனிடம் உறுதி கூறியிருந்தான். இம் முறையில் நாடு பரதனுக்கே உரியது இதனைக் கம்பர் கூனியின் வாயிலாகக், கீழ்க்கண்டவண்ணம் சொல்லியுள்ளார் என்று பாரதி கூறுகின்றார்.

"கெடுத்தொழிந்தனை உனக்கரும் புதல்வனை கிளர்நீர்
உடுத்த பாரகமுடையவன் ஒரு மகற்கெனவே
கொடுத்த பேரரசவன் குலக்கோ மைந்தர் தமக்கும்
அடுத்த தம்பிக்குமாம்; பிறர்க்காகுமோ? என்றாள்"

இச் செய்யுளுக்கு "ஒப்பற்ற இராமனுக்கும் அவன் வழிப்பிறக்கும் மக்களுக்கும் இராமனை அடுத்து நிற்கும் இலக்குவனுக்கும் மட்டுமே அயோத்திநாடு உரியது. பரதனுக்கு உதவாது. பரதனுக்குக் கேடுவராமல் காத்து வாழ முற்படு" என்று புலவர் பெருமக்கள் உரை கூறியுள்ளார்கள்

ஆனால் இச் செய்யுளிற்கு டாக்டர் பாரதி. பரதனுக்கு ஏற்கனவே கொடுத்த பேரரசு என்ற கருத்துப்படக் கீழ்க்கண்ட வண்ணம் இலக்கியச் செறிவோடு இயம்பியுள்ளார்.

"இச் செய்யுள் நடை தொடர் அமைப்பு. சொல் இலக்கணம். மொழி இயல்புகளுக்கும் பொருந்தாமை காண்போம். 'ஒரு மகற்கு எனவே கொடுத்த பேரரசு' என்ற தொடரை எடுப்போம். இராமனுக்கு மறுநாள் இளவரசு அபிஷேகத்திருநாளாய் தசரத மன்னன் சங்கல் பித்திருக்க, அதைச்சுட்டுங் கூனி பொருட்டு அமையக் 'கொடுக்கும்' என்னுது 'கொடுத்த' எனப் பொருந்தா இறந்த காலச்சொல் பிரயோகிக்க இடமில்லை,

'கோமுடி சூடுவன் நாளை' என முன்னும் கவனித்துப் பேசியவள், ஈண்டு இலக்கணத்தோடு இயல் வழக்கும் கடிச்சொற் பெயும் அடியாகக் காரணமில்லை. இங்கு இதனைக் கால வழுவமைதியாகக் கொள்வோமெனின், சொல்லின் செம்மைப் பொருளமையாது' வழுக்காணு மிடத்தன்றே வழு நீங்க வழுவமைதி. இலக்கணத்தில் வழுதேட வேண்டும்? நேர் பொருள் ஏற்புடைத்தா மிடத்துக் கவியின் இயலழகைப் பழுதாக்கி, வழு வமைத்து அழுது, அலைவதேன்?'' என்று, மறுநாள் கொடுப்பதைக் கொடுத்த என்று கூறுவது இலக்கணப் பிழை என்பதை எடுத்துக்காட்டிய பாரதி, காலவழு வமைதியாகவும் பொருள் கொள்ளக் கூடாது என்றும் கடிந்துரைத்துள்ளார்.

மேலும் வான்மீகத்தின் கருத்தை அடியொற்றியே கம்பர் இவ் இடத்தை அமைத்துள்ளார் என்பதை, ''இளவரசபிஷேகமே மன்னவன் செய்விக்க முயன்ற தாக வான்மீகத்தில் வலியுறுத்தப் பட்டிருக்க 'தேவ பாடையின் இக் கதை செய்தவர், மூவர் தம்முளும் முந்திய நாவினர் உரை, யறிந்ததன் படியே' தமிழ்ப் பாவினாலுணர்த்த' வந்த கம்பர், ஈண்டு இராமனுக்குத் தரப்போவதைக் குறிப்பரேல், தகவு மறந்து 'பேரரசு' என்று அதனைச் சுட்டியிரானன்றே!'' என்று, எடுத்துக் காட்டி. இராமன்பால் இளமையிலேயே வெறுப்புக் கொண்ட கூனி, அவனையும், அவனது தாயினையும் சிறப் பித்துப் பேசமாட்டாள் என்பதை ''கூனி இராமன்பால் வெறுப்பும் அவமதிப்பும் உடையவள். இராமனையும் சிதை கோசலையையும் மதியாமற் பேசும் வழக்க முடையவள். தன் தலைவியின் மகனை விடுத்து. மனமார அவனை 'ஒரு மகன்' எனவும், அவனெய்தப் போகும்

இளவரசைப் 'பேரரசு' என்றும் அவன் மக்களைக் கோமைந்தரெனவும் கூறுவாளா?'' என்று குறிப்பிட்டுள்ளார்.

எனவே ' கெடுத்தொழிந்தனை'' என்று தொடங்கும் பாட்டின் மூலம் கம்பர், நாடு பரதனுக்கே உரியது என்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றார் எனக் கொள்ளலாம் என்று பாரதி கருதுகின்றார் என்பது தெளிவாகின்றது.

தசரதன் நாட்டை முன்னரே பரதனுக்குக் கொடுத்துவிட்டான் என்ற செய்தியைக் கூனியின் வாயிலாகக் குறிப்பால் உணர்த்திய கம்பர் இராமன் வாயிலாகவும் இதனை வெளிப்படையாகக் கூறியுள்ளார். இராமனைத்தேடிப் பரதன் காட்டிற்குச் சென்றான். காட்டில் கமலக் கண்ணனைக் கண்ட கைகேயி மைந்தன், காலில் விழுந்து கல்லும் கரையும் வண்ணம் கரைந்துருகினான். அயோத்திக்கு வந்து அரசுத்தவிசிலேறி ஆணை செலுத்த இறைஞ்சினான். இராமனது திருநாட்டைப் பரதன் பறித்துக்கொண்டான் என்ற பெரும்பழி தன்னை விட்டகலவாவது அயோத்தி நகருக்கு வரவேண்டுமென மலர்ப்பாதம் பற்றி மன்றாடினான். பரதனின் செவ்விய மனதை அறிந்த இராமன் ' எனது நாட்டை நீ பற்றிக் கொண்டாய் என்ற பழி உனக்கமையாது. அந் நாட்டைத் தந்தை உனக்கே தந்தார் என்ற பொருள்பட

''வரனில் உந்தை சொல் மரபினால் உடைத்
தரணி நின்னதென்று இயைந்த தன்மையால்
உரனில் நீ பிறந்து உரிமையாதலால்
அரசு நின்னதே ஆள்க என்னவே''

என்று எடுத்துக்கூறியதாகக் கம்பர் பாடியுள்ளார். இராமனது இக்கூற்றைக் கேட்ட பரதன், நாடு என்னதாகில் இன்றே உனக்குத் தந்தனன் ஆள்க என்றான். பரதனின் பணிவுமொழிகளைக் கேட்ட இராமன்,

''எந்தையேவ ஆண்டு ஏழொடேழுனு
வந்த காலம் நான் வனத்துள் வைகநீ
தந்த பாரகம் தன்னை மெய்ம்மையால்
அந்த நாளெலாம் ஆள்க என் ஆணையால்''

என்று ஆணையிட்டான். இராமனது ஆணையினை மறுக்க அஞ்சிய பரதன், இராமனது பாதுகையினை தலையால் தாங்கி, நாடு சென்று நந்திக்கிராமத்தில் தங்கி இராமன் வரும் அளவு அரச அலுவல்களை நடத்தி வந்தான்.

கைகேயியின் நிறை.

கவினுர்ந்த அழகும், கணவனைப் பேணும் பண்பும் கொண்ட கைகேயி தசரதனை பழிகாரன் என்று வைய மெல்லாம் தூற்றும்படிச் செய்யலாமா? அவள் காலம் அறிந்து வரம் கேட்டு கணவனின் உயிரைப் பறித்து விட்டாளே என்று கைகேயியினை இன்று உலகம் குற்றத்தில் ஆழ்த்தியுள்ளது. இதற்கும் டாக்டர் பாரதி விடை கூறியுள்ளார்.

கைகேயி தசரத மன்னனிடம் பரதன் நாடாள வேண்டுமென்று வரம் கேட்டது. தசரதனைப் பழியிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்பதற்கே. நாட்டை முதலில் பரதனுக்கு நல்கி பின்னர் இராமனுக்குக் கொடுத்து விட்டான் என்ற பெரும்பழி தசரதனைச் சூழக்கூடாது என்பதற்காகத்தான் அவள் தசரதனிடம்

வரம் வேண்டினுள். இதனை, டாக்டர் பாரதி'' ''தசரதன்பால் அன்பும் அவன் பழியில் நாணும் யார் மாட்டும் ஒப்புரவும். அறத்துறையில் கண்ணேட்டமும் என்ஞான்றும் வாய்மையும் குன்ருக் குணக் குன்ருன கைகேயி 'அன்பு நாண், ஒப்புரவு கண்ணேட்டம். வாய்மையோடு ஐந்து சால் பூன்றிய தூண் ஆவ ளன்ருே'? அதனுல்தான் தேர்ந்து தெளிந்த அறக் கடனுற்றத் துணிகின்ருள்.

தசரதன்பால் வரும் பெரும் பழியை நீக்க முயன்று பெரும் பழி தேடிக் கொண்டாள், கைகேயியினை. மகவாசையால் பேதை பெற்றிருந்த வரம் கோலிப் பரதனுக்கு அரசிறந்தாள் என்றும் தள்ளாத கணவனை விழ்த்திய பொல்லாத கொடியாள் என்றும் கரிய செம்மலைக் காட்டுக்கு அனுப்பிய சிறியள் என்றும் உலகம் எட்டியும் சுட்டியும் உரைத்தாலும் இவள் தற்காத்துத்தற்கொண்டான் பேணி தகை சான்ற சொற் காத்துச் சோர்விலாள் பெண் ''என்ற பொய்யில் புலவன் பொருளுரைக்கு முற்றும் முதல் இலக்காக நிற்றற்கு உரியள்'' என்று டாக்டர் பாரதி குறிப்பிடுகின்ருர்.

தனது கணவனது பழிச்சொல்லைக்காக்க வேண்டும் என்ற பெரும் பண்பும் இராமன்பால் இணையற்ற அன்பும் கொண்ட கைகேயி, தானுகவே இராமனுக்கு ஏன் நாட்டைக் கொடுக்கவில்லை என்ற வினுவிற்கு டாக்டர் பாரதி கீழ்க்கண்ட விடையினைக் குறிப்பிடு கின்ருர்.

சிறந்த குணப் பரதன் பிறந்து உரியனுக
லான் அவன் உடைமையாம் அயோத்தியரசில்
அவன் அறியாது அவள் கொடையுரிமை
மேற்கொள்வது அறம் எனக் கருதகில்லன்

அதாவது கேகேயன் தன் மகள் வயிற்றுப் பிறந்த குழந்தைக்கு நாட்டை வாங்கிக் கொடுத்தான். அம் முறையில் பரதனுக்கே அந் நாடு சொந்தம் பரதனுக்கு உரிய நாட்டை, கைகேயி எவ்வாறு கொடுக்க முடியும்? பரதன் ஒருவேளை பிறக்காமலிருந்தால் கொடுக்கலாம், என்பதே இதன் கருத்தாகும்.

பழியைப் போக்க நாட்டைக் கேட்ட கைகேயி ஏன் ஏழிரண்டாண்டு பூழி வெங் கானத்துக்கு இராமன் செல்ல வேண்டும் என்று பணித்தாள் என்று எழும் வினாவிற்கு டாக்டர் பாரதியார் கூறும் விடை புதுமையானது. 'அறத்துறை நியதியும் அரச நீதியுமே'' கைகேயி இராமனைக் காட்டுக்கு அனுப்பச் சொல்லியது என்பது பாரதியின் கருத்து. இதனை ''இராமன்பால் வைத்த பேராதாரப் பிணிப் பூண்டு, அறம் இறந்த வேந்தன், மீண்டும் கழிபெருங்காதல் காரணமாக அல்லவையாற்றுவாறு காத்து, அவன் மனதைப் புனித நிலையில் நிறுவக் கற்புயர் கைகேயி கருதுவது இயல்பாம், துணைவன்தன் சொல்லறம் வழுவித் தன்னிலை வழுவக்காரணம் அவன் இராமனிடம் வைத்த அளவு இகந்த அன்பு மிகைஎன அறிந்தாள். அமிழ்தும் அளவிறந்தால் நஞ்சாமாதலின், அரசனை அற நெகிழ்வித் தலைக்கும் அளப்பரும் மகவாசையைக் குறைத்து, மனத் தூய்மை ஏற்றி, அவா அகற்றி, அறம் ஆற்றச் செவ்விப்பதற்குச் சில காலம் இராம னின்றும் அவனைப் பிரித்து வைத்தல் இன்றியமையா தெனக் கண்டாள்'' என்று நுட்பத்தோடு பாரதி நுவல்கின்றார்.

அறத்துறை நியதியோடு பிரிந்த கைகேயியின் அரசியல் நீதியினைப் பாரதியார் பல நிலைகளில் நின்று

விளக்குகின்றார். இராமன் காட்டிற்குச் செல்லாமல் நாட்டில் இருந்தால் அவன் நிலைகண்டு இரங்கி, அவன் பால் அன்புகொண்ட மக்கள் போர்நிகழ்த்த முற்படலாம். தந்தையைக் கொன்று, நாட்டை இராமனுக்குக் கொடுப்பேன் என்று இலக்குவன் போருக்கு ஆயத்த மாகலாம். தனது மருமகனுக்கு நாடு இல்லையே என்று சனகன் பெரும் படையுடன் வரலாம் சனகன் படையோடுவர பிறிதொரு காரணமும் உண்டு. பரதனின் மாமாவான கேகயன், சனகனுக்குப் பெரும் பகைவன். இவர்களது பகையினை, கம்பரும்,

"காதலுன் பெருங் கணவனை யஞ்சியக் கனிவாய்ச்
சீதை தந்தை யுன்றாதையைத் தெறுகிலனி ராமன்
மாது வன்னவனுந்தைக்கு வாழ்வினி யுண்டோ
பேதை யுன்றனை யாருளர் பழிபடப் பிறந்தார்"

(மந்தரை சூழ்ச்; பா. 74)

என்று குறிப்பிடுகின்றார். "என்று டாக்டர் பாரதி நுண்ணறிவோடு நுவன்றுள்ளார். இவற்றுக்குச்சான்றாக

"கொன்னாரின் நின்சேய் இவ்வரசு! அன்னான்
கொண்டாலும்
நன்னாது இந்நானிலம்"

(சூழ்வினை, பாட்டு 30)

என்று மக்கள் பரதன் ஆட்சியினை ஏற்கமாட்டார்கள் என்ற கருத்தையும், இலக்குவன் கூறிய வீரமொழிகளையும் எடுத்துக் காட்டியுள்ளார். இலக்குவனது வீர மொழிகளை,

"மெய்யைச் சிதைவித்துநின்
மேன்முறை நீத்த நெஞ்சம்
மையிற் கரியா ளெதிர்
நின்னையம் மௌலி சூட்டல்
செய்யக் கருதித் தடை
செய்குநர் தேவ ரேனும்
துய்யைச் சுடு வெங்
கனலிற் சுடுவான் துணிந்தேன்"

(நகர். நீங், பாட்டு 127.)

என்று கம்பர் குறிப்பிட்டுள்ளார்.

இத்தகைய காரணங்களுக்காகத்தான் கைகேயி இராமனைக் காட்டுக்கு அனுப்பினுள் என்பது பாரதி கருத்து.

தசரதன் குறை.

"தள்ளரும் பெரும் புகழ்த்தயரதன்" என்றும் "வயிரவான் பூணணிமடங்கல் மொய்ம்பினுன்" என்றும் "குன்றென உயரிய குவவுத் தோளினுன்" என்றும் தயரதன் போற்றப் படுகிறுன். இவனது ஆட்சியினைக் கம்பர்

"எய்யென வெழுபகை யெங்கும் மின்மையான்
மொய்பொரு தினவுறு முழவுத் தோளினுன்
வையக முழுவதும் வறியு ளேம்புவார்
செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றுன்"

என்று போற்றிப் புகழ்ந்து பேசுகின்றுர் ஆனல் பாரதி. தசரதனை நிறைகுணங்களிலிருந்து குறைந்தவனுகவே குறிப்பிடுகின்றுர், இதற்குப் பெரும் பாலும் வான்மிகத்

தையே சான்ருக எடுத்தாண்டுள்ளார். கம்பரது கவிகளில் இதற்குத்தெளிவான சான்றுகளாக ஒன்றிரண்டு நிகழ்ச்சிகளே உள்ளன. அவற்றை மட்டும் காண்போம்.

வரிசிலே அண்ணலான இராமனுக்கும் வாட்கண் நங்கையான சிதைக்கும் மற்றும் இலக்குவன், பரதன் சத்துருக்கனுக்கும் மிதிலேமாநகரில் மண்ணவரும் விண்ணவரும் போற்றத் திருமணம் நிகழ்ந்தேறியது. மணக்கோலம் கொண்ட மணமக்களும் அயோத்திநகர் மக்களும் மறையவர்களும் முனிவர்களும். மாமன்னன் தசரதனும் மகிழ்வோடு அயோத்தி திரும்பியவுடன், தசரதன் பரதனே அழைத்து கேகய நாட்டுக்கு விரைந்து ஏகென ஏவினுன். இதனேக் கம்பர்

''ஆணேநின் றன்முது தாதை யையரிற்
காணிய விழைவதோர் கருத்த துதலால்
கேணியில் வளேமுரல் கேகயம் புகப்
பூணுளிர் மார்பநீ போதியென்றனன்''

(பரசுரா. பாட்டு. 46.)

என்று குறிப்பிடுகின்ருர். பரதனும் சத்துருக்கனும் புதுமண மதுவின் தேறலே நுகராது கேகயத்துக்கு விரைந்தனர்.

பரதனே கேகயத்துக்கு அனுப்பியது இராமனுக்குப் பட்டம் சூட்டத் திட்டமிடுவதற்குத் தான் என்று பாரதியார் குறிப்பிடுகின்ருர். மணமுடி தரித்த இராமனே விரைவில் மணிமுடி தரிக்கச்செய்ய வேண்டும். என்பதற்காகத்தான், பரதனே அவன் பாட்டன் வீட்டுக்கு உடனே தசரதன் அனுப்பினுன் என்பது பாரதியின் கருத்து. இதற்குச் சான்ருக கூனியின்வாயிலாகக் கம்பர்

கூறியுள்ள ''போக்கிய பொருள் எனக்கின்று போந்தது'' என்ற அடியினைப் பாரதி எடுத்துக் காட்டியுள்ளார்.

பரதன் இல்லாத காலத்தில் இராமனுக்கு முடிசூட்டத் திட்டம் தீட்டப் பெற்றது, நாளும் குறித்தாயிற்று. அரசர்கள் அனைவருக்கும் அழைப்பு விடுத்தாயிற்று. ஆனால் கேகயனுக்கும் ஆண்டு இருந்த பரதனுக்கும் இந் நிகழ்ச்சி சிறிதும் அறிவிக்கப் படவில்லையே ஏன் என்று பாரதி வினவி, தசரதனது கரவுள்ளமே இதற்குக் காரணம் என்று விடை கூறுகின்றார்.

வேற்று நாட்டு மன்னர்களுக்கெல்லாம் செய்தி தெரிவித்திருந்தும், மனைவியர் இருவருக்குச் செய்தி தெரிந்திருந்தும் கைகேயிக்கு ஏன் இராமன் மணிமுடி தரிக்கும் மகிழ்வு நாளை தசரதன் தெரிவிக்கவில்லை? கூனிதானே கைகேயிக்குத் தெரிவிக்கின்றாள், கைகேயி தடுத்து விடுவாள் என்ற பயம்தான் அவளுக்குத் தெரிவிக்கவில்லை என்று பாரதி கருதுகின்றார். இராமன்பால் உயிரையே வைத்துக் கொண்டிருந்த கைகேயிக்கு செய்தி தெரிவிக்காதது தசரதன் செய்த பெருந்தவறுகும் என்பதுபாரதியின் தெளிவான கருத்து. ''இராமனைப் பயந்த எற்கு இடருண்டோ'' என்று எண்ணிக் கொண்டிருந்த கையிக்கும். செம்மையின் ஆணி என்று சிறப்பிக்கப் பெறும் பரதனுக்கும் தெரிவிக்காமல் தசரதன் இராமனுக்கு மணிமுடி சூட்ட நினைத்தது மாபெரும் குறையாகும் என்பது பாரதியின் கொள்கை.

இத்தகைய குறைகளைக் கொண்ட தசரதனை எவ்வாறு நிறைகுணத் தலைவன் என்று கூற இயலும்?

அகலிகை.

கைகேயியின்பால் நிறையும் தசரதன்பால்குறையும் கண்ட டாக்டர் பாரதி அகலிகையின் பாலும் தமது கருத்தைச் செலுத்துகின்றார்.

அகலிகை கவுதமமுனிவரின் மனைவி. சிறந்த அழகும் செம்மைப் பண்பும் கொண்டவள். இவள்பால் காதலுற்ற இந்திரன், இரவுப் பொழுதில் முனிவர் மனைக்கு அருகில் வந்து சேவல் வடிவம் கொண்டு கூவினான். முனிவர் பொழுது புலரத்தொடங்கியது என எண்ணி நீராட கங்கைக்குச் சென்றார். சேவல் வடிவம் கொண்டிருந்த இந்திரன் முனிவர் நீராடச்சென்றதும், அவரது வடிவத்தைக் கொண்டு, அகலிகையோடு கூடிக் களித்தான். சிறிது பொழுது சென்றதும் தம்மோடு கூடுவது தம் கணவர் அல்ல. இந்திரனே என்பதைத் தெரிந்தும், அகலிகை தடுக்காது வாளாவிருந்தாள். இந்நிலையில் கங்கைக்கு நீராடச் சென்ற முனிவர், ஞான உணர்வில் இந்திரனின் கரவொழுக்கத்தை உணர்ந்து விரைந்து இந்திரனையும், கணவர் இல்லை என்பதைப் பின்னர் தெரிந்தும் இந்திரனோடு கூடிய அகலிகையையும் சபித்தார். ஆயிரம் கண்களைக் கொண்டவனாக சபிக்கப் பெற்ற இந்திரனும், கல்லாகச் சபிக்கப் பெற்ற அகலிகையும் பின்னர் இராமனது கால் வண்ணம் பட்டதால் நல்லுருவானார்கள்.

இக்கதையில் வரும் அகலியை தெரிந்திருந்தும் கூடியதால் தவறு செய்தவள் என்றும், பின்னர் இராமனால் மன்னிக்கப் பெற்றவள் என்றும் புலவர் பெருமக்கள் கருத்துக்களைக் கூறி, தவறுசெய்தாலும், தவறைப் பொறுத்துத்தவமிருந்தால் இறைவன்

மன்னிப்பான் என்று தத்துவமும் கூறுவார்கள். ஆனால் டாக்டர் பாரதி அகலிகை தவறு செய்யாதவள் என்று கூறுகின்றார் இன்ப உணர்வில் திளைத்துக்கொண்டிருக்கும் அவள் தன்னை மறந்த நிலையில் மூழ்கிய அவள் எதுவும் செய்ய இயலாது என்பதற்குப் பல்வேறு காரணம் காட்டி. அதற்குத் துணையாகக் கம்பரது கீழ்க் கண்ட பாடல்களை எடுத்து எழுதியுள்ளார்கள். அது,

"புக்க வளோடும் காமப்
புதுமண மதுவின் தேறல்
ஒக்க வுண்டிருத்த லோடு
முணர்ந்தன ளுணர்ந்த பின்னும்
தக்கதன் றென்ன வோரா
டாழ்ந்தன ளிருப்பத் தாழா
முக்கணனனைய வாற்றன்
முனிவனும் முடுகி வந்தான்"
(அகலிகைப் படலம். செய்யுள். 76)

என்ற பாடலாம்.

இத் தகைய சுவை நிறைந்த சிறந்த கருத்துக்களை யெல்லாம் பாரதி தமது நூல்களில் ஆங் காங்கே பெய்து வைத்துள்ளார்கள். அவற்றை யெல்லாம் விரிப்பிற் பெருகும். இனி டாக்டர் சேதுப் பிள்ளை அவர்கள் கம்பரைக் கண்டபுலமை நோக்க முறையினைக் காண்போம்.

---

# 3. புலமை நோக்கம்.

புலமை பொலியும் பொருநை நாட்டில் பிறந்து புனல் சொரியும் பொன்னி நாட்டில் வளர்ந்து பொருள் மலியும் சென்னை நாட்டில் சிறந்த, சொல்லின் செல்வர் டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள், தமக்குக் 'கதி' யாகக் கம்பனையும் திருவள்ளுவரையும் கொண்டவர்கள். தமிழுக்குக் 'கதி' யாக இலங்கும், கம்பரையும் திருவள்ளுவரையும் தமக்கும் கதியாகக் கொண்ட சேதுப் பிள்ளை அவர்களின் ஒவ்வொரு பேச்சிலும் எழுத்திலும் கம்பரது கவிவண்ணம் களி நடனம் புரியும்.

கம்பர்பால் கரைகாணுக் காதல் கொண்ட சேதுப் பிள்ளையவர்கள் கம்பரைப் புலமை நோக்கோடு நோக்கி, சிறந்த செஞ்சொற் கவியின்பங்களைச் செந்தமிழ் நாட்டு மக்களுக்கு அள்ளிச் சொரிந்துள்ளார்கள் இவர்கள் புலமை நோக்கத்தோடு கம்பனை நோக்கத் தொடங்கிய முறைக்கு ஒரு புதுமையான வரலாறே உண்டு.

## பிறந்த சூழ்நிலை.

பிறவாயாக்கைப் பெரியோனான, சிவ பெருமானது வழி வழித் தொண்டர்கள், திருநெல்வேலிச் சைவர்கள் என்று போற்றப்படும் கார்காத்த வேளாளர்கள். இவர்கள், அறவோர்களித்தும், அந்தணர் ஓம்பியும், துறவோர் எதிர்தலும் போன்றதொல்லோர் சிறப்புக்களைப் பேணிப் பாதுகாத்த பெருமையுடையவர்கள். திருநெறி போற்றும் தேவாரத்தையும், மணிவாசகர்தம் திருவாசகத்தையும். திருத்தொண்டர் புராணத்தையும் தங்களது உயிரென மதித்து ஓம்பிப் பயின்று பிறருக்கு உரைத்து வந்தவர்கள்,

சிவநெறி போற்றிய திருமரபில் சேதுப் பிள்ளை பிறந்ததால். திரு நீறணிந்த இராவணனனைப்பழித்த இராமனது வரலாற்றைக் கூறும் இராமாயணத்தைப் பயின்றிடும் வாய்ப்பினை இளமையிலேயே இழந்தார். பள்ளிப் பருவத்திலும் இவ் வாய்ப்பு இவருக்கு இல்லை. பின்னர் பட்டப் படிப்பிலும், இராமாயணம் படிக்கும், நிலையும் இவருக்கு ஏற்படவில்லை.

சென்னையில் சென்று சட்டம் பயின்று, நெல்லைக்கு வந்து வழக்கறிஞர் பணியாற்றும் போதுகூட, சேதுப் பிள்ளைக்கு இராமாயணம் படிக்க வாய்ப்புக்கிடைக்க வில்லை,

இவர் நெல்லையில் வழக்கறிஞராகப் பணியாற்றிய போது, இளமையில் இவருக்கு ஏற்பட்ட இலக்கிய அறிவு பூத்துக்குலுங்கத் தொடங்கியது. இதனால், இவரும், இவரனைய நண்பர்களும், இலக்கியத்திறனாய் விலும், இலக்கியச்சுவையினைக் கண்டு மகிழ்வதிலும் தங்களது இனிய ஒய்வு காலத்தைப் பயன் படுத்தினர். தமிழ் இலக்கியம் முழுவதும் இவர்கள் சுவைகண்டு மகிழ்ந்தார்களெனினும், கம்பராமாயணத்தைக் கண் ணெடுத்தும் பாராமல்தான் இருந்தனர்,

### இராமாயண நுழைவாயில்;—

அந்நாளில் நெல்லையில் சிறந்த தமிழறிஞராகத் திகழ்ந்தவர் சுப்பையா முதலியார் என்னும் பெரியார். இவர் கம்பராமாயணத்தில் மிகுந்த ஈடுபாடு உடையவர். தமது பேச்சிலும் மூச்சிலும் கம்பரது கவிதையினை எடுத்தாண்டு கவியின்பத்தைக் கேட்போருக்கு ஊட்டு பவர். இதனால் இப் பெரியாரை சேதுப்பிள்ளை குழுவினர் "கம்பர் வருகிறார் கம்பர் வருகிறார்" என்று குறும்பாகப் பேசிச் சிரிப்பார்,

ஒரு நாள், சுப்பையா முதலியாரும் சேதுப் பிள்ளையும் ஒரு கூட்டத்தில் பேசும்படி நேர்ந்தது. அப்பொழுது சுப்பையா முதலியார்

''வெள்ளெருக்கஞ் சடைமுடியான்
வெற்பெடுத்த திருமேனி மேலும் கீழும்
எள்ளிருக்கு மிடனின்றி
உயிரிருக்கு மிடநாடியிழைத்தவாறோ
கள்ளிருக்கு மலர்க் கூந்தற்
சானகியை மனச் சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்கு மெனகருதி
உடல்புகுந்து தடவியதோ ஒருவன் வாளி

என்ற இப்பாடலைச் சொல்லி சுவைததும்பவிளக்கினர், இப்பாடலின் சுவையும், சொற்றமிழ்த்திறமும், சொல்லின் செல்வரை இன்பசிகரத்தில் ஆழ்த்தின. சொற்பொழிவு முடிந்து சுப்பையா முதலியார் வீட்டிற்குச் சென்று தாங்கள் விளக்கிய பாடல் எந்தக் காண்டத்தில் உள்ளது என்று சேதுப் பிள்ளை கேட்க, முதலியார் மகிழ்ந்து அது, கம்பராமாயணத்தில். யுத்த காண்டத்தில் உள்ளது என்று தமது நூலையும் அவருக்கு அளித்தார். சேதுப் பிள்ளை, இத்தகைய பாடல் அமைந்த சிறந்த இலக்கியத்தை இதுவரை பயிலாமல் போனேமே என்று வருந்தி அதுமுதல் அந் நூலைப் படித்து நுண்ணிய நயங்களை புலமை உணர்வோடு எடுத்துச் சொல்ல முற்படலானர்.

## கடைசியிலும் கம்பஇராமாயணமே.

சேதுப் பிள்ளைக்கு எந்தப்பாடல்கம்பராமாயணத் திற்கு நுழைவாயிலாக விளங்கியதோ, அதே பாடலைத் தான் அவர்களின் இறுதிமூச்சு அடங்க இரண்டு மூன்று

விஞடிகளுக்கு முன்னரும் பாடுபடி வேண்டினர். சென்னையில் தலைமை மருத்துவ மனையில் நோய் வாய்ப் பட்டிருக்கும் நிலையில் அடியேன்தான் அன்னருக்கு உதவிபுரியும் பேறு பெற்றேன். நோயின் கடுமையால் உடலில் பல்வேறு இடங்களில் ஊசி குத்தப் பெற்றது. இருப்பினும் நோயின் வெம்மை குறையவில்லை. ஊசி போடவும் இடமில்லை. மருத்துவப்பேரறிஞர் டாக்டர் இரத்தினவேல் சுப்பிரமணியம் அவர்கள், வந்து ஐயா இன்று ஊசி போட வேண்டுமே என்று கூறியதும். சேதுப் பிள்ளை நோயின் கொடுமையிலும், சிறிய புன்னகையினை தெரிவித்து, என்னை நோக்கி, அந்தக் கம்பராமாயணப் பாடலைச் சொல்லு என்றார்கள். நான் எந்தப் பாடல் என்பதைத் தெரியாமல் திகைத்தேன் அவர்கள் எனது நிலையை ஒருவாறு ஊகித்தறிந்து நாகுழற '‘வெள்ளெருக்கஞ்'' என்று தொடருமுன் நான் அந்தப் பாடலை பாடி முடித்தேன். இராவணனது உடல் எங்கும் இராமனது அம்பு துளைத்தது போல் டாக்டர். சேதுப் பிள்ளையின் உடல் முழுவதும் ஊசி போடப்பட்டது என்பதைக் குறிக்கவே அந்தப் பாடலைப் பாடச் சொன்னார்கள். பின்னர் அவர்கள் பேசவே யில்லை. கண்களின் ஓரங்களிலிருந்து தான் இரண்டு சொட்டுக் கண்ணீர்த் துளிகள் உதிர்ந்தன. அதோடு அவர்களது ஆவியும் பிரிந்தது.

## இருவகை எதிர்ப்பு

தன்து மூச்சின் இறுதிவரையிலும் கம்பரது கவிதையை எடுத்தாண்ட சொல்லின் செல்வருக்கு அவ் வப்போது பல எதிர்ப்புக்களும் தோன்றியதுண்டு. இவர்களுக்குத் தோன்றிய எதிர்ப்பினை, டாக்டர் பி. நடராஜன் அவர்கள் ''பல்லாவரம் மறைமலை

அடிகளார் போன்ற அறிஞர்களும். நெல்லையம்பதி சைவப் பெரியார்கள் சிலரும் பிள்ளையவர்களை இராமாயணப் பணியிலிருந்து விலக்க முயன்றனர். ஆயினும் கம்ப இராமாயணத்தைக் கங்கைக் கரையில் சைவ நெறி தழைக்கும் வழி கண்ட குமரகுருபர அடிகளின் தெய்வத் தொண்டை அறிந்திருந்த பிள்ளை அவர்கள் கலங்காது தமது தொண்டைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தார். கம்ப இராமாயண ஆராய்ச்சியில் பழமையில் நின்று மட்டுமல்ல புதுமையில் நின்றும் பிள்ளை அவர்களுக்கு எதிர்ப்பு எழுந்தது. முழுநீறு அணிந்த சிவ பக்தனை இராவணனைப் பழிப்பது முறையா என்று நெஞ்சம் பதைத்த சைவ பக்தர்கள் ஒரு பாலிருக்க, பச்சைத் திராவிடனை இராவணனை இழிவுபடுத்தி ஆரியத் தலைவனை இராமனுக்கு ஏற்றம் கற்பிக்கும் நூலைப் பரப்புதல் நீதியா'' என்று கேட்கும் எதிர்ப்பு இருந்தது என்று கூறியுள்ளார்.

இந்த இரண்டு வகையான எதிர்ப்புக்களிலிமிருந்து தான் சேதுப் பிள்ளையவர்கள் கம்பரது காவியச் சுவையினை உண்டு உலகுக்கும் அளித்தார்கள். சென்னையிலுள்ள ஒய். எம். சி. ஏ. மன்றத்தில் கம்பராமாயணத்தினை வாரம் தோறும் சொல்லிச் சம்பரது கவிச்சுவையினை மக்களுக்கு அளித்து வந்தார், சென்னைமாநகரிலிருந்து வெளிவந்த 'ஆனந்தபோதினி' என்னும் வார ஏட்டில் வாரம் தோறும் கம்பர் கவியின்பம் என்ற தலைப்பில் இனிய எளிய இலக்கியக் கட்டுரைகள் எழுதிவந்தார். வீரமாநகர் என்ற விழுமிய இவரது நூல் கம்பராமாயணக் கட்டுரைகளைக் கொண்டதே.

இவற்றைத்தவிர இன்னும் எத்தனையோபல

கட்டுரைகளை எழுதியும், சொற்பொழிவுகள் நிகழ்த்தியும், தமிழ் மக்களின் நெஞ்சத்தில் இன்பத்தேனைப் பாய்ச்சியுள்ளார்கள். அவற்றை இனி. பாத்திரங்களின் மூலமாகக் காண்போம்.

இராமன்.

மன்னுயிரையெல்லாம் தன்னுயிராக எண்ணிக் காத்த தசரதனுக்குத் தவமைந்தனாகப் பிறந்தான் இராமன். இராமனது பிறப்பையும், சிறப்பையும், இவற்றைச் செந்தமிழில் வடித்த கம்பரது கவிவண்ணத்தையும் இணைத்து டாக்டர் சேதுப் பிள்ளை ' இலங்கை வேந்தனாகிய இராவணனை அழித்தலே இராமாவதாரத்தின் குறிக்கோளாகும். இக் கருத்தோடு கோசல நாட்டில் தோன்றிய இராமனை வில்லாண்மையில் சிறந்த வீரனாக விளக்கிக் காட்டுவதோடு அமையாது, அவ் வீரனது தெய்வத் தன்மையையும், ஆங்காங்கு குறித்துச் செல்வது கம்பரது காவியப் போக்காய் காணப் படுகின்றது. மனித உருத்தாங்கி இம்மண்ணுலகில் வந்து ஏனைய மக்களைப் போலவே இன்ப துன்பங்களை நுகர்ந்து வில்லின் செல்வனாய் விளங்கிய வீரனிடம் அமைந்த இறையொளியை ஆங்காங்கு மேகத்தின் இடையே இலங்கும் மின்னொளி போலக் கற்போர் கண்ணெதிரே காட்டி மறைக்கும் கம்பரது காவிய நலம் ஆராய்ந்து அறிவோர்க்கு ஓர் அருவிருந்தாகும்'' என்று குறிப்பிட்டு, இராமன் பிறந்த காரணத்தைக் கம்பர் மூலமாக நமக்குத் தெளிவாகக் காட்டுகின்றார், இராமனது திருவவதாரத்தைக் கம்பர்,

"ஒரு பகல் உலகெலாம்
உதரத்துட் பொதிந்து
அரு மறைக் குணர் வரும்
அவனை அஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில்
காட்டும் சோதியைத்
திருவுறப் பயந்தனள்
திறங்கொள் கோசலை"

என்று கம்பர் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

கம்பரது இப்பாடலுக்குப் புலமைச் செறிவோடு டாக்டர் சேதுப் பிள்ளை "அருமறைக்கப்பாலாய இறைவனை ஆதியும் அந்தமுமில்லா அரும் பெரும் சோதியை அஞ்சனக் கருமுகிற் கொழுந்தை, ஆதி மன்னனது முதல் தேவியாய கோசலை பயந்தாளென்று கம்பர் அறிவிக்கும் திறம்மிக அழகுவாய்ந்ததாகும். தண்ணளியால் உலகம் தாங்க அவதரித்த பேரொளியைக் கவிஞர் நிறைந்த மொழிகளால் புகழ்ந்துரைத்தார் உலகத்தையெல்லாம் படைத்துக் காத்துக் கரந்து விளையாடும் முழு முதற் பொருளைத் தன்மணி வயிற்றில் அடக்கிய பெருமை சான்ற கோசலையை "திறங்கொள் கோசலை" என்று கம்பர் நயம்படப் புகழ்ந்தார். பொங்கும் மங்கலம் எங்கும் தங்குமாறு ஒப்புயர்வற்ற மைந்தனைக் கோசலை பெற்றாள் என்னும் கருத்தைத் 'திருவுறப் பயந்தனள்" என்னும் திருந்திய சொற்களால் அமைத்துப் போந்தார்" என்று நலங் கூறியுள்ளது மகிழ்வதற்குரியது.

சீதை.

பூவினை வெறுத்து அயோத்தி மன்னன் பொன் மனைபுகுந்து கணவனுடன் நாடுதுறந்து காடுபுகுந்து, சிறை யெடுக்கப்பெற்று சிறுமைகள் அடைந்தும் செந்நெருப்பிலிட்ட பொன்னாய் இலங்கிய சீதையை கம்பர் செஞ்சொற்களால் வாழ்த்தி வணங்குகின்றார், மாதா அனைய சீதையை.

"பொன்னின் சோதி போதினின்
நாற்றம் பொலிவே போல்
தென்னுண் தேனின் திஞ்சுவை
செஞ்சொற் கவிஇன்பம்
கன்னி மாடத்து உம்பரின் மாடே
களிபேடோடு
அன்னம் ஆடு முன்துறை
கண்டங்கயல் நின்றார்"

என்று பாராட்டுகின்றார் கம்பர். இப்பாட்டினை புலமை நலத்தோடு நோக்கிய டாக்டர் சேதுப்பிள்ளை மிகச் சிறந்த முறையில், "கன்னிமாடத்தின் மீது, பொன்னின் நிறமும், போதின் மணமும், தேனின் சுவையும், கவியின் இன்பமும் ஒருங்கே அமைந்த ஓர் மங்கை நின்றாள் என்று கவிஞர் கூறும் மொழிகள் கற்போர் கருத்தைக் கவர்வனவாகும். செஞ்சொற் கவியின் செம்மை சான்ற நலத்தைச் செவிவாயாகப்பருகி செவ்விய இன்பமுற்ற கவிஞர் பன்னலம் திகழும் பாவையைச் செஞ்சொற்கவிஇன்பம் என்று சிறப்பித்த முறை சிந்தைக்கினியதாகும். கண்ணுக்கினிய பொன்னின் ஒளியினும் மூக்கிற்கினிய நறுமணத்தினும், நாவிற்கினிய நறுஞ்சுவையினும் சிந்தைக்கினிய செஞ்சொற்

கவியின்பமே சிறந்ததென்று கருதி, அதனைச் சிகரமாய் அமைத்த அருமை அறிந்து போற்றுதற் குரியதாகும்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

இத்தகைய அழகுவாய்ந்த சீதையை இராவணனின் தேவி வண்டமர்ஓதி "அமுதாற் செய்த நஞ்சு" என்று குறிப்பிடுகின்ருள். இதனை வண்டமர் ஓதியின் வாயிலாக கம்பர்,

"பஞ்செரி யுற்ற தென்ன
        அரக்கர்தம் பரவை யெல்லாம்
வெஞ்சின மனிதர் கொல்ல
        விளிந்ததே மீண்டதில்லை
அஞ்சினேன் அஞ்சினேன்
        இச் சீதை யென்னும் அமுதாற் செய்த
நஞ்சினுல் இலங்கை வேந்தன்
        நாளை இத்தகையன் அன்ருே?''

என்று குறிப்பிட்டுள்ளார். வண்டமர் ஓதியின் இக் கூற்றினைத் தமது கூர்த்தமதியால் ஓர்ந்து டாக்டர் சேதுப் பிள்ளை சிறப்பான கருத்துக்களை வெளியிட்டுள்ளார்கள். இந்திரசித்தன் வீர மாணம் எய்தினுன். அவனது மலை போன்ற மார்பின் மீது, மயில்போல் விழுந்து வண்டமர் ஓதி அழுது புரண்டாள். அழுது புரண்ட அந்நிலையில் மதி நலம் சான்ற இம் மங்கை பின் நிகழவிருக்கும் பெருந்திங்கை நினைத்தாள். நெஞ்சம் உருகினுள். தேவரினும் மூவரினும் வலியனுகிய இலங்கை வேந்தனும் இராமன் அம்பால் இறக்கப் போகிருனே என்று எண்ணினுள். எண்ணிய கருத்தைச் சொல்ல நா வெழாது தரை மீது கிடந்த தன் மைந் தனது உடலை நோக்கி "அந்தோ, இலங்கை வேந்தனும்

நாளை இத்தகையனன்றோ'' என்று இயம்பி அழுதாள். கண்டோர் கருத்தைக் கவரும் பேரழகு வாய்ந்த சீதை, காமுற்ற ஆடவரை அழிக்கும் கற்பு வாய்ந்தவளாதலின் அத்திருமகளை 'அமுதாற் செய்த நஞ்சு'' என்று அரக்கமாதேவி கருதினாள். சீதையின் அழகெனும் அமுதை மாந்திய அரசன் அவ்வழகினுள் அமைந்த கற்பெனும் நஞ்சால் அழிவது திண்ணம் என்றறிந்த மண்டோதரி அக் கருத்தை வெளியிடும் மொழிகளில் சோகம் பொங்கித் ததும்புகின்றது'' என்று கவி நலத்தோடு நவின்றுள்ளார்.

## செஞ்சோற்றுக் கடனாற்றிய செம்மல்.

கம்பரது செந்தமிழ்க்காவியத்தில் வரும் சிறந்த பாத்திரங்களுள் கும்பகர்ணனும் ஒருவன். வில்லியார் சொல்லியுள்ள பாரதத்தில் வரும் கர்ணனும், இக் கும்பகர்ணனும் செஞ் சோற்றுக் கடன் கழிப்பதில் தலைசிறந்து விளங்கினார்கள் என்பதைத் தமிழறிஞர் சேதுப் பிள்ளை அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

ஆனால் ஒருவகையில் கர்ணனை விட கும்பகர்ணனே நிகரற்று விளங்கினான் என்று கருத இடமுண்டு. வேதங்களையும் விழுமிய நூல்களையும் கற்றுத் தெளிந்தவன் கர்ணன். பிறப்பால் உயர்ந்தவன். சிறப்பால் மேன்மை மிக்கவன். ஆனால் கும்பகர்ணன் கர்ணனைப் போன்று கல்வி கற்றவனல்ல. பிறப்பாலும், மற்றையச் சிறப்பாலும் கர்ணனுக்கு இணையானவனல்ல. இத்தகைய நிலையிலும், அவன் செஞ் சோற்றுக் கடன் கழிக்க முனைந்து நின்று தன்னுயிரை ஈந்தமைதான் சிறப்பு எனக் கொள்ளலாம்.

கும்பகர்ணன் வலிமை சான்ற பெருவீரன். கூற்று வனும் இவனைக்கண்டு குலைந்து நடுங்கினன். கடுங் காற்றையும் கொடுங்கனலையும் பிழிந்து சாறு கொள்ளும் பெற்றிமையாளன். இவ்வீரன் சீதை தனது தமையனால் சிறையெடுக்கப் பெற்றதை நினைந்து வருந்தி விடுவிக்கச் சொன்னன். 'தேவியை விடுத்து ஆவியைக் காக்குமாறு தமையனை வேண்டினன். இலங்கை வேந்தன் அவ்வுரையைக் கொள்ளாது தள்ளியபோது தன்னை ஆதரித்து வளர்த்த தமையனுக்காக அமர்புரிந்து ஆவி துறக்கத்துணிந்தான். இவ் வீரனது பேராற்றலை அறிந்த இராமன் இவனைத் தன்னேடு இணைத்துக் கொள்ள விரும்பினன், இதற்கிசையாத இவனை "நன்றி மறவாத வீரன். தமையனைத் துறந்து பகைவரைச் சேர்ந்துவாழ இறையளவும் இசைந்தானல்லன். அஞ்சா நெஞ்சு படைத்த கும்பகர்ணன் பிறர் செய்த நன்றியைப் பொன் போற் போற்றிய பெற்றிவாய்ந்தவன். தினைத் துணை நன்றியையும் பனைத்துணையாகக் கொள்ளும் பண்புடையவன். காலத்திற் செய்த நன்றியை ஞாலத் திலும் பெரியதாகக் கருதும் நல்லறிஞன்,

"எந்நன்றி கொன்றார்க்கும் உய் வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்று நாயனர் அருளிய உண்மைக்கு நல்லதோர் சான்றயமைந்தவன்" என்று டாக்டர் சேதுப் பிள்ளை பாராட்டுகின்றார்.

திருவள்ளுவரின் இக்குறளின் கருத்தைக் கம்பர் எடுத்தாண்டுள்ளார் என்பதையும். அது கீழ்க் கண்ட கவியால் விளங்குகின்றது என்பதையும் பிள்ளையவர்கள் எடுத்துக் காட்டியுள்ளார்கள், அக்கவி,

"சிதைவகல் காதல் தாயைத்
தந்தையை குருவை தெய்வப்
பதவி அந்தணரை ஆவைப்
பாலரைப் பாவை மாரை
வதைபுரிகு நர்க்கும் உண்டாம்
மாற்றலா மாற்றல் மாயா
உதவிகொன் றார்க்கு என்றேனும்
ஒழிக்கலாம் உபாய முண்டே?"

என்பதாம். இக்கவிக்கு இலக்கியமாகத் திகழ்ந்த கும்பகர்ணனை நோக்கி, தம்பி விபிடணன் இராமனோடு சேர்ந்து கொள்வதே நமக்கு நல்லறம் என்று கூறினான். இக்கூற்றினைக் கேட்ட கும்பகர்ணனின் பதிலை இலக்கியச் சுவையோடு, "நிலையற்றதாய இவ்வுலக வாழ்வை விரும்பி இராவணன் செய்த பெருநன்றியை மறப்பேனா? பன்னாள் போற்றி வளர்த்துப் போர்க் கோலம் புனைந்தனுப்பிய மன்னனைத் துறந்து மாற்றாருடன் சேர்வேனோ? மலரோன் வரத்தால் நீ மாயா வரம் பெற்றாய். உன் செயல் உனக்குத் தக்கதேயாம். புலையுறு மரணம் எய்தலே எனக்குப் புகழாகும். அரணமைந்த இலங்கையின் அளவிறந்த செல்வத்தை விரும்பித் தன் தமையனைக் கொல்ல வந்த பகைவனை வாழ்த்தி அவன் அடிபணிந்து வாழ்வேனோ?" என்று பிள்ளையவர்கள் எடுத்துக் கூறுகின்றார்கள். இக்கருத்து அமைந்த பாடல்,

''செம்பிட்டுச் செய்த இஞ்சித்
திருநகர்ச் செல்வந் தேறி
வம்பிட்ட தெரியல் எம்முன்
உயிர்கொண்ட பகையை வாழ்த்தி
அம்பிட்டுத் துன்னங் கொண்ட
புண்ணுடை நெஞ்சோடு ஐய
கும்பிட்டு வாழ்கிலேன் யான்
கூற்றையும் ஆடல் கொண்டேன்''

என்பதாம்.

கும்பகர்ணனது மானவீரம் போர்க்களத்தில் பொன்போல் ஒளிர்ந்தது. இலக்குவனோடு கொடும் போர்புரிகையில், சுக்ரீவன் கும்பகர்ணனது மூக்கைப் பற்றிப் பிடுங்கி எறிந்துவிட்டான். மூக்கிழந்த கும்பகர்ணன், தனது நிலையை எண்ணி மனம் வருந்தி இராமனை நோக்கி மூக்கற்ற எனது முகம் கண்டு தேவர்கள் சிரிப்பார்கள். எனவே எனது கழுத்தை அறுத்துக் கடலுக்குள் எறிந்திடுக'' என்று வேண்டினன். இராமனும் தனது உயரிய கணையால் அவ்வாறே செய்தான். கும்பகர்ணனது இந் நிலையினை டாக்டர் சேதுப்பிள்ளை, செந்தமிழ்ச்சுவையினை இழைத்து,''உலக வாழ்வில் மானமே வீரர்க்கு அணி யென்று கருதிய கும்பகர்ணன் மரணத்தின் பின்னும் மானங் காக்கக் கருதிய முறை மிக்க மாண்புடையதாகும். மலை போலுயர்ந்த மேனியும், காலனை வெல்லும் வீரமும் வாய்ந்து, நன்றியறிதலென்னும் நல்லறத்தில் வழுவாது நின்று, மாற்றாரைத் தொழுது வாழ்வதினும் மாண்டொழிதல் நன்றென்னும் மான வாழ்க்கையின் மணிக் கொழுந்தாய் அமைந்து, ஆவி துறந்து அழியாப் புகழெய்திய கும்பகர்ணன் வீர வாழ்க்கை இவ்வுலகில் என்றும் வியந்து போற்றப்படும் என்பதில் ஐயமில்லை'' என்று கூறியுள்ளார்.

## இருவேடர்.

கமலக் கண்ணனாகிய இராமன்பால் கரைகாணாக் காதலனாக விளங்கிய கங்கை வேடனாகிய குகனை, காளத்தியப்பர்பால் பேரன்பு கொண்ட காளத்தி வேடனான கண்ணப்பரோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார், டாக்டர் சேதுப் பிள்ளை.

ஆழநீர் கங்கையில் அம்பிகடாவும் ஏழை வேடனான குகன், இராமன்வதிந்த தவப் பள்ளியின் வாயிலை வந்தடைந்தான். அஞ்சன வண்ணன்பால் ஆராத அன்புகொண்ட குகன், தேனும் மீனும் கொண்டு, வந்து "ஐய, நின் வருத்தம்தீர, தெள்ளிய தேனும் திருத்திய மீனும் கொணர்ந்தேன் "என்று கூற அருகிலிருந்த முனிவர்கள் திகைத்தனர். மாதவர் கருத்தை அறிந்த இராமன் அன்போடு கலந்த அற்ப உணவும் அமிழ்தினும் சிறந்தது" என்றான். குகனது இப் பேரன்போடு கண்ணப்பரின் அனபினை ஒப்பிட்டு" கானகப் பன்றியின் தசையைக் கனலிற் காய்ச்சி, பல்லால் அதுக்கி நாவாற் சுவைத்து, கையில் எடுத்துவந்து காளத்திநாதனது கடும்பசி தீர்க்கப்போந்த திண்ணன் திறமும், தேனும் மீனும் திருத்திக்கொணர்ந்து கமலக் கண்ணனைக் காணப் போந்த குகன் திறமும் ஒப்புநோக்கி உணரத் தக்கனவாம்" என்று குறிப்பிட்டுள்ளார். குகனையும், திண்ணப்பரையும் ஒப்பிட்டு, கங்கை வேடனும், காளத்தி வேடனும் என்று தனியாக ஒரு ஒப்புமைக் கட்டுரையே பிள்ளையவர்கள் எழுதியுள்ளர்,

இராமனது நிறைகுணங்களையும் தவவேடக்காட்சி யினையும் கண்ட குகன்,

"கார்குலாம் நிறத்தான் கூற
காதலன் உணர்த்துவான் இப்
பார்குலாம் செல்வநின்
இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வ னேன் நான்
இன்னலின் இருக்கை நோக்கி
தீர்க்கிலேன் ஆனது ஐயா செய்குவன்
அடிமை யென்றான்"

என்று கூறி வணங்கி நின்றான். இச் செய்யுளில் வரக் கூடிய "பார்குலாம் செல்வநின்" என்ற சொற்றொடருக்கும் மற்றவற்றிற்கும் டாக்டர் சேதுப் பிள்ளை புலமை நலத்தோடு பொருளுரை கூறியுள்ளார். "ஆழிசூழ் உலகமெல்லாம் ஆளுதற்குரிய அண்ணலை 'பார்குலாம் செல்வ' என்று ஆர்வமொழிகளால் அழைத்தான். பிறப்பினாலும், ஏனைய சிறப்பினாலும் அவனியெலாம் ஒரு குடைக்கீழ் ஆளுதற் குரிய அஞ்சன வண்ணன், மணிமுடியை வெறுத்து, சடைமுடி புனைந்து, பொற்கலையை நீத்து, வற்கலை புனைந்து, தரைமீதிருந்த கோலத்தைக்கண்டு, தயங்கிய குகன், தன் கண் செய்த பாவம் கடலினும் பெரிதென்று உருகுவானாயினான். இத்தகைய கோலத்தில் இராமனைக் கண்டும், தன் கண்களை ஈர்த்தெறியாத எளிமையை நினைந்து ஏங்கினான். அன்பே உருவான அஞ்சன வண்ணனை நோக்கி ஐயனே! திருவெலாம் ஆளப்பிறந்த ஒருவனே! நின்னை இககோலத்திற் கண்ட கண்களைப் பிடுங்கி எறியாத கள்வன் யானே" என்று கதறிக் கலங்கினான். காளத்தியப்பரது கடுந் துயரைப் பொறுக்கலாற்றாது, தன்கண்ணை அகழ்ந்தெடுத்து கண்ணப்பன்

என்று பெயர் பெற்ற காளத்தி வேடனது அன்பின் பெருமையை நினைந்து வருந்துவான் போன்று, கங்கை வேடன் தன்னைக்கள்வனேன் என்று கூறுந்திறம் கூர்ந்து நோக்கத்தக்கதாகும்'' என்று புலமைநோக்கோடு நயவுரை, தந்துள்ளார் டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை.

இதுவரை எடுத்துக் காட்டியுள்ள பாடல்களைத் தவிர இன்னும் எத்தனையோ பல பாடல்களைப் புலமை நோக்கோடு நோக்கிக் கம்பரது காவியப் படைப்பின் பேரழகை உலகுக்கு எடுத்தியம்பியுள்ளார். உரை நடையில் எழுதும் போதும். சொற்பொழிவுகள் நிகழ்த்தும் போதும் மட்டும் இவர்கள் கம்பரைக் கையாளவில்லை. தனிப்பட்ட நிலையில் பேசும் போதும், தனிப் பட்டவரோடு உரையாடல் நிகழ்த்தும் போதும், கம்பரது பாட்டில் வரும் சுவைமிகுந்த அடிகளை இணைத்துப் பேசி, பேச்சினை இனிமையாக்குவது இவரது இயல்பு. எடுத்துக்காட்டாக ஒன்றிரண்டு நிகழ்ச்சிகளைக் காண்போம்.

**கைவண்ணம் காணல்.**

டாக்டர் சேதுப் பிள்ளை அவர்களுக்கு உணவுகள் மிகவும் பக்குவமாகத் தயாரிக்கப் படவேண்டும். எளிமையான உணவுகளையே அவர் இறுதிக் காலத்தில் உண்டு வந்தார். தளர்ந்த தமது இறுதி நாட்களிலும், கம்பராமாயணப் பதிப்பு பணிக்காக அண்ணமலைப் பல்கலைக்கழகத்திற்கு இவர் அடிக்கடி வருவார். (இவரது கம்பராமாயணப் பதிப்புப் பணியைப் பற்றிப் பதிப்பு நோக்கத்தில் கூறப்பெற்றுள்ளது). அப்பொழுது அறுசுவையோடு கூடிய உணவு வகைகளைப் பல்கலைக் கழக விருந்தினர் விடுதி இவருக்கு அளிக்க முன் வரும்.

இந்த அறுசுவை உணவுகளை யெல்லாம் இவர் வேண்டாம் என்று கூறிவிடுவார். எனவே, எளிமையான, கோதுமை உணவு வகைகள். தமிழ்ப் பெரும் புலவர் அருணாசலம்பிள்ளை அவர்கள் வீட்டிலிருந்தோ அல்லது, சிதம்பரம் பச்சையப்ப முதலியார் வீட்டிலிருந்தோ வரும். ஒருநாள் தமிழ்ப் புலவர் அருணாசலம் பிள்ளை வீட்டிலிருந்து உணவு வந்தது, எளிமையும், நொய்மை யுமுள்ள உணவு வகைகளை நான் எடுத்து வைக்க அவர் சுவைத்து உண்டு கொண்டிருந்தார். பிள்ளை அவர்களைக் காணத் தமிழ்ப் பெரும் புலவர் வெள்ளைவாரணனுர், பேராசிரியர் இராமநாதன் செட்டியார் ஆகியோர் வந்தனர். வந்தவர்கள் உணவு வகைகள் எல்லாம் எப்படிஎன்று கேட்க பிள்ளை அருகிலிருந்த அருணாசலம் பிள்ளை அவர்களைக் காட்டி ''இவர்களின இனிமையான கை வண்ணத்தை இங்கு கண்டேன்'' என்றதும். அறை முழுவதும தமிழ்சசிரிப்பு எழுந்தது. பினனர், பேராசிரியர் இராமநாதன் செட்டியார் இவர்களின் கைவண்ணமா என்ற ஐயத்தை பெருஞ்சிரிப்புக் கிடையில் எழுப்ப ''ஆம். இவர்களே எனக்காக அருகிலிருந்து உணவுதயார் செயகின்ருர்கள்'' எனறதும் மீணடும அங்கு தமிழ இசையென இனிய சிரிப்பொலி எழுந்தது.

இவ்வாறு, நண்பர்களோடு உரையாடும்போது கம்பராமாயணச் சொற்ருெடரை இனிமையோடு இணைத்துப் பேசி, கேட்போரை இன்பக் கிரகத்தில் ஆழ்த்தும் சேதுப்பிள்ளை அவர்களின் புலமை நோக்கத் தினைச் சொல்லிக்கொணடே யிருக்கலாம். கம்பராமாயணத்தைப் புலமை நோக்கோடு நோக்க வேண்டும் என்று எண்ணி இவர்கள் தூவியவிதைதான், இன்று நாடு முழுவமே கம்பராமாயணப்பட்டி மன்றங் களாக காட்சியளிக்கின்றன. இது இவருக்குக்கிடைத்தி வெற்றி எனலாம்.

# புரட்சிநோக்கம்.

சான்ருேர் உடைத்து தொண்டை நன்ருடு என்று ஆன்ருேர்களால் போற்றப்படும் தொண்டை நாட்டின் கண்ணுக இலங்குவது கற்றவர் போற்றும் காஞ்சி மாநகரம். தொன்மைச் சிறப்பும் பழமையின் பண்பும் கொண்ட இந்நகரை நற்றமிழ்ப் புலவர்கள் அன்று தொட்டு இன்றுவரை வாயார வாழ்த்தித் தலையார வணங்குகின்றனர்.

கலையழகும், கன்னித்தமிழ்ச் சுவையழகும் நிறைந்த இக் காஞ்சியில் நினைவிற் கெட்டாத நெடுங் காலத்திற்கு முன்பிருந்தே அறிவுத்துறையில் துறைபோகிய அறிஞர்கள் பலர் தோன்றியுள்ளனர். அத்தகைய அறிஞர்களுள் ஒருவர் டாக்டர் சி. என். அண்ணுதுரை என்னும் பேரறிஞர்.

டாக்டர் அண்ணுதுரை கம்பராமாயணத்தைப் புரட்சி நோக்கோடு நோக்கியவர். இவர் இந்நூலைப் புரட்சி நோக்கோடு நோக்கியதற்குத் தக்க காரணங்கள் உண்டு. இவர் பிறந்து வளர்ந்த சூழ்நிலைகளும்,இதற்குக் காரணங்களாய் அமைந்துள்ளன.

## பிறந்து வளர்ந்த சூழ் நிலை.

கற்றவர் போற்றும் காஞ்சி அந்நாளில் வைதிகக் கோட்டையாக இலங்கியது. இந்நகரில் ஆங்காங்கே சமய முழக்கங்கள் முழங்கிக் கொண்டே அந்நாளில் இருந்தன. இசைச் சொற்பொழிவுகள் (கலாட்சேபம்) எங்கும் எந்நாளிலும் நடந்தன. இசைச் சொற் பொழிவுகள் நடத்திய பெரியார்கள் இராமாயணத்

தையே மிகச் சிறப்பாக எடுத்துக்கொண்டு இசைச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவர். இப் பெரியார்கள் இராமனைக் கடவுள் என்று கூறுவதோடமையாது. இராவணனை அரக்கன் என்றும் கூறி. அவன் பிறந்த குலத்தைப் பழித்தும் வந்தனர் இராமனை ஆரியன் என்றும் உயர்ந்தோன் என்றும் கூறி போற்றினர். இராவணனைத் திராவிடன் என்றும் இழிகுலத்தோன் என்றும் கூறித் தூற்றினர். இவை யெல்லாம் அண்ணாவின் இளமை நெஞ்சில் முள்போல் குத்திக்குடைந்தன. இங்கிலேயில் படித்துப் பட்டம் பெற்ற அண்ணாவுக்குத் தோன்றாத் துணையாகப் பெரியாரது கருத்துக்கள் தென்பட்டன.

பெரியார் சிந்தனை.

கடவுள் காப்பியம் என்று கூறப்பெறும் கம்பராமாயணத்தில் திராவிடர்களை இழித்துக் கூறுவதேன்? கருத்துக்குப் பொருந்த மற்ற கருத்துக்கள் சொல்லப்பட்டிருப்பதேன்? காமத்தைத் தூண்டும் பாடல்களைக் கடவுள் காப்பியத்தில் கம்பன் பாடியதேன்? என்பன போன்ற பெரியாரின் கேள்விகள் அண்ணாவின் சிந்தனைக்கு வலுவூட்டின.

பெரியாரின் இச்சிந்தனைகளை நெஞ்சத்தில் பசுமையாகக் கொண்டு, கம்பராமாயணத்தைக் கசடறக் கற்று அதிலுள்ள முரண்பட்ட கருத்துக்களையும் திரிபுநிலைகளையும் மக்களுக்கு எடுத்துக்கூறி உண்மை நிலைகளை உலகோருக்கு உணர்த்துவதென உளங்கொண்டார். இவரது உண்மை உரைகள் கம்பராமாயணத்தைக் "கதாகாலட் சேபமாகக்" கொண்ட பெரியாருக்கு புராணப் பண்டிதர்கட்கு எட்டிக் காயாய் இலங்கின.

**தீ பரவட்டும்.**

புராணப் பண்டிதர்களின் கருத்துக்களை கடுமையாகச் சாடின அண்ணா கம்பராமாயணத்தைப்பற்றிப் பற் பல சொற்போர்களும் நிகழ்த்தியுள்ளார். அவற்றுள் டாக்டர் சேதுப் பிள்ளை, டாக்டர் சோமசுந்தர பாரதி ஆகியோருடன்நிகழ்த்திய சொற்போர் தமிழகத்தில்தனிச் சிறப்புடையதுஎனக் கருதலாம். இச் சொற்போரினை அண்ணாவின் தீ பரவட்டும் என்ற நூலில் கண்டு மகிழலாம். இந் நூலில் அண்ணா, கம்பராமாயணத்தைக் கனலில் இடவேண்டும் என்று தக்க சான்றுகளோடு எடுத்துக் காட்டியுள்ளார். "இராமாயணம், பெரியபுராணம் முதலிய நூல்களை நாங்கள் கண்டிப்பது, அவைகளில் புகுந்துள்ள பொய்மைகள் ஆபாசங்கள் ஆகியவற்றையே என்பதை அனைவரும் அறிவர்" என்று தொடங்கி, கருத்துரை ஆற்றலானர்.

**கலையா?**

"கம்பன் கலையை அழிக்கலாமா?" என்று கேட்கின்றனர். "கம்பன் இராமாயணத்தைக்கலைஎன்று கருதும் அன்பர்கள், ஒரு பெரியாரின் பெயரால், ஓர் அண்ணாதுரையின் பெயரால் அக்கலை அழிந்து படும் என்று கருதுவரேல், அவ்வளவு சாமான்யமானது, கலையாகாது என்றுரைக்க ஆசைப்படுகிறேன். கலையைக் குலைக்கும் செயலால், எமது கலையிலே புரட்சி உண்டாக்க விழைகிறோம் தக்க காரணங்களோடு" என்று எடுத்துக் கூறி, தமிழருக்குத் தமிழ் நெறி, தமிழ் முறை, ஒழுக்கம் வீரம், கற்பு காதல் என்னும் பண்புகளைத் தரக்கூடியன கலையாக இருத்தல் வேண்டுமே தவிர, வேற்றூர் இனத்தைப் புகழ்வதும் அதற்கு ஆதிக்கமளித்துத் தமிழ் மக்கள் மனதில்

தன்னம்பிக்கை யற்றுப் போகும்படி செய்வதும், தமது இனத்தைப் பற்றியே தாழ்வாகக் கருதிக் கொள்ளும் படியான நிலைமை உண்டாக்குவதுமான கதை, காவியம், தேவை இல்லை என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டி யுள்ளார்.

## எது காவியத்திறமை?

கம்பரது காவியத்திறமை, போற்றத் தகுந்தது இல்லையா?'' என்ற வினவை எழுப்பி ''கம்பரின் கவிதை திறமையைக் கண்டு நாங்கள் வியக்கிறோம் அந்தத் திறமை ஆரியத்தை ஆதரிக்கும் தன்மையாயிற்றே என்பது கண்டு திகைக்கிறோம்'' என்று குறிப்பிட் டுள்ளார்.

''கம்பரது காவியம் திராவிட இனத்துக்கே களங்கம் கற்பிப்பதாக உள்ளது என்ற கருத்தைப் பற்பல கோணங்களில் நின்று மிகச் சிறப்பாக அண்ணா சுட்டிக் காட்டியுள்ளார். சிறந்த செம்மைக்குணம் படைத்தவன் இராவணன் என்று கூறிவிட்டு, பின்னர் ஓர் ஆரிய மங்கையைகண்டு காமுற்று கருத்தழிந்து அறம் மறந்து அழிந்தான் என்று முடிப்பது திராவிட இனப் பெருமைக்கே ஊறுதேடுவதாகும் என்று இயம்பி யுள்ளார்.

## உயரிய நட்பா?

நட்புக்கு இலக்கணமாக ராமாயணம் உள்ளது என்பர்? நாயகன் இராமனும் நாய்க்குகனும், கண்டு, நட்புக் கொண்டதைவிட காணாமல் உணர்ச்சியால் நட்புக் கொண்ட, சோழனையும் பிசிராந்தையாரையும் குறிக்கலாமே என்று பழைய தமிழ் இலக்கியத்திலிருந்து

வரலாற்றினை எடுத்துக் காட்டியுள்ளார். இளங்கோ அடிகளின் தியாகத்துக்கு இராமனது தியாகம் இணை யாகாது என்று, தியாகம் கம்பராமாயணத்தில் உள்ளது என்போருக்கு விடை கூறியுள்ளார்.

**சிறையெடுத்தகாரணம்.**

இராவணன் சிறையெடுத்துச் சென்றது தகாத செயல் என்றதற்கு மிகச் சிறப்பாக விடைகூறியுள்ளார். 'இராவணன் சீதையை எடுத்துச்சென்றது. காமச் செயல் என்றல்லவோ இன்றும் கூறுகின்றனர். அக்காலப் போர் முறையில் ஆநிரை கவர்தல், மாதரை எடுத்தல், கோட்டை தாக்கல் என்பன முறைகள். ஆகையால், இராமனைப் போருக்கிழுக்க, —தன் தங்கையை மான பங்கம் செய்த பின்னர் போருக்கிழுக்க, அந்தச் சமயத் தில் இராமனிடம் எஞ்சியிருந்த விலைமதிக்கக் கூடிய பொருள் சீதை மட்டுமேயாகையால் சீதை எடுத்துச் சென்றான் என்ற உண்மையை உரைக்கலாகாதா?', என்று வினவுகின்றார்.

**எது வீரம்?**

கம்பராமாயணம் வீரத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறதே? என்போருக்குக் கம்பராமாயணம் வீரத்தை விளக்க வில்லை என்று தக்க சான்றுகளோடு பதில் கூறியுள்ளார். ''இராமனின் போரிலே வீரம் மிகுந்த தென்று கூறினால் அது மனிதற்குள் நடந்த போரல்ல. திருமாலின் அவதாரமாம் இராமன் மாயா அஸ்திரங் களின் வலிமைகொண்டு போரிட்டு வென்றான். இது வீரமாகாது ஆண்டவனின் பிரபாவம் என்று கூறலாம். ஆண்டவனின் வீரத்தை வியந்துரைக்க வேண்டுமா? ''என்பது அவரது பதிலுரை.

## மறுப்புரை - இராவணன் ஆரியனே.

அண்ணாவின் இத்தகைய புரட்சிகரமான கருத்துக்களுக்கு. டாக்டர் சேதுப் பிள்ளை பதிலிறுத்துள்ளார் டாக்டர் சேதுப் பிள்ளையின் கூற்றில் மிகுதியாக இடம் பெற்றிருந்தது இராவணன் திராவிடன் அல்லன் என்ற கருத்தேயாகும். இராவணன் திராவிடன் அல்ல என்ற கருத்துக்குக் கம்பராமாயணத்திலிருந்தே. பலமேற் கோள்கள் காட்டியுள்ளார். " திராவிடன் என்று கூறும் இராவணனிடம் எல்லா நல்ல குணங்களும் இருந்தன. ஆனால் இரக்கம் மட்டுமில்லை. தமிழர்கள் இரக்கம் இல்லாதவர்களா? இராவணன் பாடிய சாமவேதம் வடமொழி வேதமல்லவா? அனுமனும் வடமொழியில் சீதையோடு பேசினால் இராவணன் அறிவான் என்று கருதினான். இதிலிருந்து இராவணனுக்கு வடமொழி நன்கு தெரியும் என்று தெரிகிறதல்லவா? இராவணனைப் புலஸ்தியன் என்று குறிப்பிடுவர் புலஸ்தியர் எனப் படுவோர் ஆரியராவார். இராவணனைக் கொன்றதால் இராமனுக்கு பிரமஹத்தி வந்ததென்றும். அதைப் போக்கவே இராமன் சிவலிங்க பூஜை செய்தானென்றும் தேவாரம் செப்புகின்றது. இராவணன் பிராமணனில்லை என்றால், பிரம்மஹத்தி எங்ஙனம் வரும்? ஆகவே நான் நண்பரின் வாதத்தை மறுக்கிறேன்" என்று இராவணன் திராவிடன் அல்ல என்று மறுமொழி கூறி; கம்பர் இராமாயணம் செய்த காரணத்தை" கம்பனின் காலம் தமிழ்நாடு சீர்குலைந்திருந்த காலம், எனவே அவர் மக்களுக்குப் பெருமையை உணர்த்த ஓர் நூல் இயற்றக் கருதினார். எல்லா மக்கட்க்கும் தெரிந்த ஓர் கதையை எடுத்து, அதிலே தமிழ் நாட்டுக்கலைச் செல்வத்தை அமைத்தார்" என்று எடுத்துக் காட்டியுள்ளார்.

சீதை தமிழ்மங்கை.

"கம்பரின் கவியால் சீதை நமக்கு ஓர் தமிழ் மங்கையாகவே தென் படுகிருள். காதல் மணத்தைக் கம்பர் சித்தரித்துள்ளார். கம்பரின் சித்திரத்தில் கண்ணகி என்னும் தமிழ் நாட்டுப் பத்தினியின் உருவைக் காண்கிரேம். எனவே தமிழுக்கு கம்பராமாயணம் செல்வம் போன்றதாகும்" என்பது டாக்டர் சேதுப் பிள்ளையின் கருத்து.

காதல் மணம்.

கம்பராமாயணத்தில் தமிழ்ப் பண்பாடு மணக்கிறது என்பதை எடுத்துக்காட்டி அதற்கு ஒரு சான்றும் கொடுத்துள்ளார் டாக்டர் சேதுப் பிள்ளை "இராமன் வில்முறித்துச் சீதையை மணந்தான் என்கிருர் வான்மீகி. கம்பனே தமிழருக்குக் காதல் மணத்தைக் கூறுவதே சிறப்புடைத்து என்று எண்ணினர். அவர்கள் கூறியது போல அகப்பொருள் தோன்றிய நாடு தமிழ் நாடு. காதல் இன்றேல் சாதல் என்பதையே நாட்டிய நாடு இது. எனவே இராமனும் சீதையும் ஒருவரையொருவர் காதலித்தனர் என்று கூறுகிருர். இங்கு நாம் தமிழ் நாட்டு மாண்பு காண்கிரேம்."

குற்றங்குறையுடைய ஆரியபாத்திரங்களைக் கம்பர் திட்டுகையில் பூசி மெழுகினர் என்ற அண்ணுவின் கருத்துக்கு, "சிறியோர் செய்த சிறு பிழையை பொறுத்தல் பெரியோர் கடன். கம்பரின் பெருந்தன்மையை அது காட்டுகிறது" என்று சொல்லின் செல்வர் மறுப்புரை கூறியுள்ளார்.

## அண்ணாவின் மறுப்பு.

சொல்லின செல்வரின் சுருக்கமான பேச்சுக்கு, அமைந்த அண்ணாவின் மறுப்பும் சுருக்கமாகவே உள்ளது. ''இராவணனை ஆரியன் என்று குறிப்பிட்டார்கள். அது வாதமுமல்ல. ஆதாரமும் கிடையாது. இராமாயணம் ஆரியதிராவிடப் போராட்டத்தைச் சித்தரிக்கிறது என்பதற்கு ஐவகரின் சான்று மட்டும் அல்ல இன்னும் எத்தனையோ பல சான்றுகளும் உண்டு. வடமொழியை இராவணன் பேசினான் என்பதற்காக அவன் ஆரியன் ஆக மாட்டான். ஆங்கிலம் பேசும் தமிழர் ஆங்கிலராகார். ஆரியன் குறைகளை நீக்கியது கம்பனின் பெருந்தன்மை என்று சொல்லின் செல்வர் கூறியதற்கு ''மாற்றுக்குறைந்த உலோகத்தைப் பொன் மெருகிட்டு ஏய்ப்பது சட்டப்படி குற்றமாகும். அதுபோலவே ஆரியக் கற்பனைகளைத் தமிழ்க் கலை எனும் நகாசு வேலை செய்தது, தமிழருக்குக் கம்பர் செய்த கேடு என்பேன்'' என்று அண்ணா பதில் கூறினார்.

கம்பராமாயணத்தைப் பற்றிய கருத்துரைகளை இருபேரறிஞர்களும் மிகச் சிறப்பாக எடுத்துக் கூறிய தாகத் தலைவராகஅமர்ந்த கோவைக் கிழார் குறிப்பிட்டார்.

## சேலம் - செவ்வாய்ப் பேட்டையில்

சென்னையில் நிகழ்ந்த இச் சொற்போரைப் போன்று (இக்காலப் பட்டி மன்றம் போன்றது) சேலம் செவ்வாய்ப் பேட்டையிலும் நிகழ்ந்தது. சேலத்திலும் அண்ணா அவர்கள், கம்பராமாயணத்தைப் புரட்சி

நோக்கோடு நோக்கி, அதைத் தீயில் இடவேண்டும் என்று கூறினார். டாக்டர் சோமசுந்தர பாரதியார் அவர்கள் இதனை மறுத்து உரை நிகழ்த்தினார்.

### புள்ளி விவரம்.?

புரட்சி நோக்கோடு கூறிய அண்ணா, "கம்ப ராமாயணத்தில் எந்தப் பாட்டில் தமிழர் இழிவுபடுத்தப் பட்டுள்ளனர்" என்று புலவர் பெருமக்கள் கேட்கும் கேள்விக்குக் "கம்பராமாயணத்தில் இன்ன பாட்டினால் தமிழன் இழிவுபடுத்தப்படுகிறான், ஆரியன் உயர்த்தப் படுகிறான் என்று நாங்கள் கூறவில்லை. அது அவசியமு மில்லை அந்த ஆராய்ச்சியிலல்ல நாங்கள் ஈடுபட்டிருப் பது. கம்ப இராமாயணத்தின் கருத்தினால், அதைக் கற்று மக்கள் வாழ்க்கையிலே அமைத்துக்கொள்ளும் கொள்கையால், ஆரியம் உயரவும், தமிழர் தாழவும், ஆரியர் ஆதிக்கம் செலுத்தவும், தமிழர் அடிமையாகவு மான விளைவு ஏற்பட்டது என்பதே நாங்கள் கூறுவது" என்று குறிப்பிட்டுள்ளார்.

### கவிஞன் காலத்துக்குக் கட்டுப்பட்டவனா?

கம்பர் காலத்துக்குக் கட்டுப்பட்டுக் காவியம் பாடினார் என்று பேராசிரியர்கள் குறிப்பிடுவதற்கு அண்ணா 'கதையும் கருத்தும், அதிலே வரும் ஆரிய மும் கம்பன் செய்யவில்லை. இருந்ததை மக்கள் சரி எனக் கொண்டிருந்ததைக் காவியமாக்கினான் என்பர். சரி! அதற்குக் கம்பனை குறை சொல்ல வேண்டாம் என்பது வாதத்துக்குப் பயன் படட்டும். கம்பராமாயணம், கம்பர் காலக் கருத்துக்குச் சரியாக இருப்பினும் இக் காலக்கருத்து அதற்கு நேர் மாறாக இருக்கும்போது இன்று எப்படித் தமிழர் கம்பர் இராமயணத்தை ஏற்றுக் கொள்ள முடியும்." என்று பதிலிறுத்துள்ளார்.

பாரதியின் பதிலுரை.

அண்ணுவின் கூற்றுக்கு டாக்டர் பாரதியார் புலமைச் செறிவோடும், கம்பர்பால் உள்ள பற்று தலோடும் பதில் கூற முனைந்து "கம்பராமாயணம் ஒரு பெரிய சமய நூல் ஆகையினுல் அதை எரிக்கக் கூடாது என்று ஒரு பிரிவினர் கூறுகின்றனர். மற்ருெரு பிரிவினர். அது ஒரு சிறந்த கவி ஆகவே அதை எரிக்கக் கூடாது என்று கூறுகின்றனர். ஒரு சிறந்த கவியை எரிப்பது நல்லதல்ல என்றே நான் கூறுகிறேன். அது தமிழ் நெறியல்ல. ஆபாசக் கருத்துக்களை எரிக்கச் செய்யப் படும் முயற்சியில் நான் தொண்டு செய்ய முன் வருவேன், இதனை மெள்ள மெள்ள மக்களிடம் கூறி மக்கள் மனதை மாற்றவேண்டும். அது நல்ல பலன் தரும்" என்று தமது கருத்தைக்கூறி, 'கம்பனைப் போல் ஒரு சிறந்த கவியை நான் கண்டதில்லை. கம்பன் வேண்டுமா? தமிழ் நாடு வேண்டுமா என்ருல் நான் கம்பன் வேண்டும், தமிழ் நாடு வேண்டேன் என்று கூறுவேன்" எனக் கூறினுர்,

நடுவர் உரை.

டாக்டர் அண்ணுதுரை டாக்டர் பாரதியின் இக் கூற்றுக்கு. டாக்டர் பாரதியின், முற்காலப் பேச்சுக் களிலிருந்து சான்று காட்டி பாரதி முன்னுக்குப் பின் முரண்படுகின்ருர் என்று மொழிந்து கம்பராமாயணம் போன்ற ஆரியத்தை உயர்த்திக் கூறும் ஆபாச நூல்களைக் கனலில் இடவேண்டும் எனறு கூற, இச் சொற் போருக் குத் தலைமை வகித்த திரு. இராமசாமி 'இருவரும் ஆரிய ஆதிக்கம் கூடாதென்றும். இராமாயணுதிகளிலே உள்ள கற்பனைகள் கூடாதென்றும்தான் கூறினுர்கள், ஒருவர்

கொளுந்தவேண்டு கூறினர். மற்றவர் மெள்ள மெள்ள மக்களுக்கு விஷயத்தை எடுத்துச் சொல்ல வேண்டு மென்று கூறினர். ஆகவே இருவருக்கும் அடிப்படை யான அபிப்பிராய பேதமில்லை அபிப்பிராய பேதமிருந் தால்தானே நான் ஏதாவது தீர்த்து வைக்க வேண்டிய அவசியமுண்டாகும்'' என்று கூறிச் சொற் போரை நிறைவு செய்தார்.

## கம்பரது முரண்பாடு.

பெரும் பெரும் பேராசிரியர்களோடு கம்பரைப் பற்றிய கருத்துப்போர் நடத்திய அண்ணு, கம்பரது பொருத்த மற்ற முன்னுக்குப் பின் முரண்பாடான கருத்துக்களையும் எடுத்து எழுதியுள்ளார். இதனை இவரது நாடும் ஏடும் என்ற நூலில் காணலாம்- ''கம்ப ராமாயணத்தில் கம்பன் கிட்கிந்தையை வருணிக்குங் கால் அதனை ஒரு சிறந்த நாடாகக் காண்கின்ருன். ஆங்கு வதியும் மக்கள் சகல கலா வல்லர்கள் என்றும், சாஸ்திர விற்பன்னர்கள் என்றும் நீதிதவருது ஆண்டனர் என்றும் பலப்பல ஆடை ஆபரணங்கள் அணிந் திருந்தனர் என்றும் பெண்கள் மிகவும் அழகுள்ளவர் களென்றும். பேசுவதில் ஆற்றல் மிக்கவர்கள் என்றும் கூறி முடிவில் அவர்கள் குரங்குகள், விலங்குகள் என்று கூறுகின்ருன். இது முன்னுக்குப்பின் முரண் பாடல்லவா?''

மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் ஆடல் பாடல்களும் நிறைந்த இலங்கைமாநகரில் இரக்க மில்லாத அரக்கர்கள் வாழ்கிருர்கள் என்று கூறுகின்ருர். கம்பர் கூறும் அரக்கர்களையும் அவர்தம் தேவியர்களையும் ''அரக்கர்கள் மகா கோர உருவினர்,

கரியமேனியும் பெரிய உடலும் கொண்டவர்கள். ஆனால் அவர்கள்தம் பெண்கள் தேவ மாதர்களுக்கு ஒப்பான அழகுள்ளவர்கள்'' என்று அண்ணா எடுத்துக் காட்டி ''ஆண்கள் அழகற்ற விகார உருவினர்; ஆனால் பெண்கள் அழகுள்ள அணங்குகள் இதிலே ஆண் பெண் பொருத்தம் உண்டா?'' என்று புரட்சி நோக்கோடு நோக்கி வினவுகின்றார். அதோடு'' நம் நாட்டுத் தற்கால முறைப்படி, காதலின்றிக் கணவன் மனைவியராகச் சேர்க்கப் பட்டாலும்கூட, அவர்கட்குப் பிறக்கும் ஆண்கள் எல்லோரும் அழகற்ற அநாகரிகர் களாயும், பெண்கள் எல்லோரும் அழகு மிக்க அணங்கு களாகவுமா விளங்குவர் என்று சிந்தித்துப் பாருங்கள். இத்தகைய கருத்துக்கள் காலத்திற்கும் நிலைமைக்கும் எற்றவாறு மாற்றப்பட வேண்டுமா? வேண்டாமா? என்று ஆராய்ச்சி செய்யுங்கள்! உங்கள் அறிவுக்கு வேலை தாருங்கள்'' என்று நம்மைச் சிந்திக்க வைக்கின்றார். நமது சிந்தனையைச் சுழற்றிய அண்ணா பின்னர் கம்பரசம் தருகின்றார்.

**கம்பரசம்.**

அண்ணா அவர்களின் கம்பரசம் தமிழகத்தில் ஒரு பரபரப்பை உண்டுபண்ணியது எனலாம். தமிழன்னைக்கு காவியக்கோயில் கட்டிய கம்பர். தமது கோயிலில் பற்பல இடங்களில். இணைவிழைச்சியினைத் தூண்டக் கூடிய பாட்டு ஓவியங்களை அமைத்துள்ளார் பொருத்த மற்ற இடங்களில் அமைக்கப்பெற்றுள்ள இப் பாடல்களை யெல்லாம் கம்பரைக் கவியின்பத்துக்காகக் கற்கும் பெரியார்கள்கூடக் கூறுது விட்டனர். இதனை அண்ணா அவர்களே 'டி கே. சி; பி ஸ்ரீ; சேதுப் பிள்ளை

முதலாய புலவர் பெருமக்கள், கம்பனின் கவித்திறனைக் கூறிடக் கேட்டதுண்டு. ஆனால் அவர்கள் இதுவரை எனக்குச் சூட்சமத்தை விளக்கிடவில்லை. இராமன் வீர உரையைக் கம்பன் தீட்டுவது பார்! இயற்கையின் எழிலை அப்படியே எடுத்துக்காட்டும் திறத்தைக்கவனி! உவமைகள்தரும் உல்லாசத்தை உணர். என்று கூறி வந்தார்களே தவிர உண்மைக் கம்பரசம் எது வென்று கூறவில்லை. நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற பெருநோக்கின்றி எதை எதையோ எழில் என்று கூறி வந்தார்கள் எழுதி வந்தார்கள். உண்மையை உரைத்திட வில்லை'' என்று எடுத்துக் காட்டி கம்பர் சொல்லக்கூடாத இடங்களில் கூட, இணை விழைச்சினைத் தூண்டும் வண்ணம் பாடியுள்ள பாடல் கள் பலவற்றை எடுத்துக் காட்டியுள்ளார். அவற்றுள் ஒன்றைக் காண்போம்.

சீதை இராவணனால் சிறையெடுக்கப் பெற்றாள். சீதையைத் தேடி இராமனும் இலக்குவனும் அங்கு மிங்கும் அலைகின்றார்கள். வழியில் சுக்ரீவன் நட்பு கிடைக்கின்றது. சுக்ரீவனின் அமைச்சன் அநுமன். அஞ்சனையின் மைந்தன். ஆன்ற கல்விக்கேள்விகளில் சிறந்த சான்றோன். அன்பையும் அறத்தையும் கண்ணா கக் கொண்ட அறிஞன். ஒழுக்கத்தை உயிராகக் கருதிய ஒண்மையாளன். இல்லறத்தையே வெறுத்து என்றும் ஒழுக்கம் ஒருசிறிதும் வழுவாதவகையில் வையகத்துக்கு வாழ்ந்துகாட்டிய வள்ளல். இத்தகைய அநுமனைச் சீதையைக் கண்டு வரக்கமலக் கண்ணன் அனுப்புகின்றான். அப்போழுது சீதையின் அங்க அடையாளங்களை இராமன் கூறினான் என்று கம்பர்.

வாராழி கலசக் கொங்கை
வஞ்சிபோல் மருங்குவாள் தன்
தாராழிக் கலைசார் அல்குல்தடங்
கடற்கு உவமை தக்கோய்
பாராழி பிடரில் தங்கும் பாந்தமும்
பணி வென்றோங்கும்
ஓராளித் தேரும் கண்ட உனக்கு
நான் உரைப்ப தென்ன்''

பாடுகின்ருர்' இப்பாட்டில் வரும் கருத்தை அண்ணு கடிந்து, கடவுள் காப்பியத்தில், கம்பர் கணவன் மனைவியை பிறருக்கு அடையாளம்சொல்கின்ற பொழுதில் இத்தகைய ஒழுக்கக் கேட்டை தருகின்ற சொற்களைச் சொல்லலாமா? என்று வினவுகின்ருர். இவ்விடத்தில் காவியத் திறமையினையும் கவிச்சுவை யினையும் காணவேண்டும் என்று கூறுவோருக்கு "ஒரு புலவரின் திறனை விளக்க ஒரு பாவை நிர்வாண மாக்கப் படுவதா? அதிலும் மனைவியை நிர்வாணக்கோல மாக்க கணவன் முனைவதா? அதையும் மற்ருெரு நண்பன் முன்பா? அதிலும் அனுமன் எனும்நித்திய பிரம்மச்சாரி முன்பா? என்று வினுக்களை எழுப்பி விடை கேட்கின்ருர்

கம்பர் மட்டுமா இத்தகைய பாடல்கள் பாடியிருக் கிருர்? இதை விட எத்தனையோ முறையில் இழிதகைமை யுடைய பாடல்கள் தமிழில் உள்ளனவே? நைடதம் என்ற நூலில் இழிதகைமை பாடல்கள்பல உள்ளனவே என்று கேட்போருக்கு டாக்டர் சி. என். அண்ணுதுரை புரட்சி நோக்கோடு பதில் கூறியுள்ள பாங்கு பொருத்த மாக உள்ளது

நைடதம் நளன் என்னும் மன்னன் கதை. நளச்சக்ரவர்த்தியின் கதையை அதிவீரராமபாண்டியன் என்னும் மன்னன் காவியமாகப் பாடினான். மன்னன் கதையில் சிற்றின்ப வெறியினைத் தூண்டும் பாடல் வரலாம். வந்தாலும் தவறுஇல்லை. ஆனால் தேவ கதையில் காமத்தைத் தூண்டும் பாடல்கள் வரக் கூடாது. தேவ கதையில் தெளிவற்ற மக்கட்கு தெய்வீகத்தின் தன்மையைத் தெளிவாகத் தீட்டிக் காட்டி எழுந்த சரிதைகளில் காமச் சுவையைக் கலக்கி விடுவது கூடாது. கலக்கினாலும் ஒரு அளவு இருக்க வேண்டும். வரையறை இருத்தல் வேண்டும். எல்லை யற்ற முறையில் காமச் சுவையினை மிகுவிக்கும் கவிகளை யாத்துவிட்டு இடையிடையே எம்பெருமான் திருவடிகளே சரணம்' என்று இறைஞ்சினால் அது வெறும் இறைச்சலாக இருக்கமுடியுமே தவிர இன்னருளைக் கூட்டுவிக்காது என்பதே என் போன்றோரின் கருத்து. என்பது அண்ணாவின் கூற்று.

இரண்டிற்கும் வேறுபாடு.

அதிவீரராமபாண்டியன் நளன் என்னும் பாத்திரத்தை வரம்புக்கு உட்படுத்தியே படைத்திருக்கிறான். பெண்கள் குளிக்கும் அழகைக் கண்ட நளன் யாவரும் தன்னைக் காணமுடியாத வண்ணம் தன்னுருவை மறைத்தும் — பின்னர் கண்களைக் கையால் மூடியும் இருந்தான் என்று நயத்தக்க நாகரிகத்தோடு அதிவீரராமபாண்டியன் படைத்துள்ளான். ஆனால் கம்பர் பெண்கள் குளிக்கும்போது மன்னன் கண்டு மகிழ்ந்தான் என்று பாடியுள்ளார். இதனை

குடைந்து நீராடும் மாந்தர்
குழாம் புடை சூழ வாழித்
தடம் புயம் பொலிய வாண்டோர்
தார்கெழு வேந்த னின்றான்
கடைந்த நாளமிழ்தி றேடும்
கடலிடை வந்து தோன்றும்
மடந்தைமார் சூழ நின்ற
மந்தரம் போல மாதோ''

என்ற அவரது பாட்டால் அறியலாம் என்று இரண்டுக்கும் உள்ள வேறு பாட்டை எடுத்துக் காட்டியுள்ளார்.

**கசப்பில் கருப்புகட்டி.**

இத்தகைய பாடல்களை எல்லாம் எடுத்துக் காட்டி, இறைமையினைப் பற்றிப் பாடப்பட்ட நூலில் இது ஏன் என்று கேட்ட அண்ணா கம்பரசத்தின் இறுதியில் குறிப்பிட்டுள்ள கருத்து அனைவரது சிந்தனைக்கும் விருந்தாக உள்ளது என்பதில் ஐயமில்லை அது ''தேவ கதை கூறி மக்களைச் சன்மார்க்கத்தில் ஈடுபடச் செய்யக் கம்பன் காட்டும் வழி சரிதானா என்றுதான் கம்பதாசர்களைக் கேட்கின்றோம். சன்மார்க்கம் என்ன அவ்வளவு நாற்றமும் கசப்பும் உள்ளதா? அப்படி நல்ல எண்ணத்தோடு பூசித் தரப்பட்டாலும்கூட சுவைப்பவர்கள் மதுரம் கிடைக்கும்வரை சுவைத்துவிட்டு கசப்புத் தெரியத் தொடங்கியதும் உமிழ்ந்து எறிந்துவிடுவார்களே; நோக்கம் ஈடேறவும் வழி இல்லையே'' என்பதாம். இக் கூற்றில், கசப்பு மருந்தைக் குழந்தைக்குக் கொடுக்கக் கருப்புகட்டியைத் தேய்ப்பது போல், ஆழ்ந்த தத்துவத்தை விளக்கக் கம்பர் இன்பச் சுவையை மேலே பூசியுள்ளார் என்று கூறும் பெரியார்களுக்குப் பதில் அமைந்திருப்பதைக் காணலாம்.

கம்பரது இத்தகைய காமச்சுவை மிகுந்த பாடல்களை எடுத்துக்காட்டி அவரை இடித்துக் கூறும் அண்ணா கம்பரது கவிதை ஆற்றலைக் கண்டு வியந்து புகழ்கின்றார். அவரே கம்பரச முன்னுரையில் "கம்பனின் கலைத்திறமை—கவிதை அழகு இவை பற்றி அல்ல நாம் குறை கூறுவது—கவி எடுத்தாண்ட கதை. அக் கதையின் விளைவு. அதனால் நமது இன கலாச்சாரத்துக்கு வந்துற்றகேடு இவை பற்றியே நாம் கண்டிக்கிறோம்." என்று குறிப்பிட்டுள்ளார்.

அண்ணாவின் புரட்சி நோக்கம் தமிழகத்தின் இலக்கிய உலகில் ஒரு புதிய விழிப்பினை உண்டாக்கியது எனலாம். இலக்கிய ஆராய்ச்சி செய்த பெரியார்களெல்லாம் இலக்கியத்தில் உள்ள சுவை மிகுந்த பாக்கள். சொற்றொடர்களின் அமைப்புக்கள். வரலாற்றுக் குறிப்புக்கள். வாழ்க்கை முறைகள் உயர்ந்த சிந்தனைகள் ஒழுக்கம் நிறைந்த கருத்துக்கள் ஒற்றுமையாக அமைந்த பாட்டுக்கள் ஒப்புமைக்காட்சிகள் அரசியல் சமுதாயப் படப்பிடிப்புகள் ஆகியவற்றை மட்டுமே ஆராய்ந்தனர். கவிஞன் செய்திருக்கும் குறைகளைக் கூறிட எவரும் முன் வந்ததில்லை. ஒரு முகமாகவே நோக்கிய அவர்களது ஆராய்ச்சி மறுமுகமாக நோக்கவில்லை என்று கூறலாம். ஆனால் அண்ணா மறுமுகமாக நோக்கியதோடு அதனைப் புரட்சி நோக்கமாகவும் நோக்கியதால்தான் கம்பராமாயணத்தைப் பற்றிய பல புதிய சிந்தனைகள் நமக்குக் கிடைத்தன.

இனிக் கம்பராமாயணப் பதிப்பு நோக்கங்களைக் காண்போம்.

# 5. பதிப்பு நோக்கம்.

பதிப்பு நோக்கம் என்று கூறுவது கி. பி. 1840 ஆம் ஆண்டு முதல் இன்று வரை ஏட்டுப்படிகளிலிருந்து அச்சுப் படிகளுக்குப் பதிப்பித்த வரலாற்றைக் கூறுவதேயாகும்.

## முதற் பதிப்பு

கம்பராமாயணத்தை ஏட்டுப்படியிலிருந்து, முதன் முதலில் அச்சுப் படிக்குப் பதிப்பித்த பெரியார் திருவேங்கடாசல முதலியார் என்னும் பெரியாரேயாகும். இப்பொழுது கிடைத்த சான்றுவரை இப்பெரியார்தான் முதன் முதலில் 1840-ஆம் ஆண்டு பாலகாண்டம் முதல் யுத்தகாண்டம் வரை பதிப்பித்த பெரியார் எனத்தமிழ் இலக்கிய உலகம் கூறுகின்றது. ஏறத் தாழ பதினான்கு ஏட்டுப்படிகளை ஒப்பு நோக்கிப் பிழைகளைக் களைந்து கம்பராமாயணம் அச்சுப் படியாகப் பதிப்பிக்கப் பெற்றது. பின்னர் 1845-ஆண்டு மழவை மகாலிங்க ஐயர் என்னும் பெரியார் பாலகாண்டத்தை மட்டும் பதிப்பித்தார். இப்பெரியாரின் பதிப்புக்குப் பின்னர் சுப்பராயப் பிள்ளை என்ற பெரியார் பாலகாண்டம் முதல் உத்ரகாண்டம்வரை கி. பி. 1858-ல் பதிப்பித்தார். மூலங்களை மட்டுமே இது வரை இவர்கள் பதிப்பித்து வந்தனர்.

## முதல் உரை,

கி. பி. 1861-ஆம் ஆண்டு கிருஷ்ணசாமி முதலியார் என்னும் பெரியார் பாலகாண்டத்தை பதிப்பித்து அதற்கு உரையும் எழுதினார். 1861- ஆம் ஆண்டுதான் கம்பராமாயணத்திற்கு உரை ஏற்பட்டது எனலாம்.

இது"கற்ளுேரும் மற்ளுேரும் கேட்டுக் கொண்டபடி சென்னைத் துரைத்தனக் கல்விச் சங்க விசாரணைத்தலைவ ராகிய மாாா ஸ்ரீ ஏ-ஜே-ஆர்பத்து நட்டு துரையவர் களனுமதி பெற்று சேலம் ஜில்லாத் துரைத்தனப் பாடசாலைத் தமிழ்த் தலைமை புலமை நடாத்துகின்ற மாடம் பாக்கம் சு. கிருஷ்ணசாமி முதலியாரவர்களால். வித்துவான் கா. சபாபதி முதலியாரவர்கள் நார்மல்கலிஜ் தமிழ்ப் பண்டிதர். கோ. இராசகோபால பிள்ளையவர்கள் ஆகிய இவர்களுடைய யுதவியைக் கொண்டியற்றி முத்தமிழ் விளக்க அச்சுக் கூடத்திற் பதிப்பிக்கப் பட்டது.'' இந்நூலின் முன் பக்கத்தில் இத்துணை வாசகங்கள் உள்ளன. இப்பெரியார் எழுதியபாலகாண்ட உரையில் எடுத்துக்காட்டாக ஒன்று காண்போம். அரசியல் படலத்தில் வரும் ஒரு பாட்டு. கம்பர் தசரதன் அரசியல் சிறப்பை

''வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசையர்
உள்ளமும் ஒரு வழியோட நின்றவன்தன்
தள்ளரும் பெரும்புகழ் தயரதப் பெயர்
வள்ளல் வள்ளுறையின் மன்னர் மன்னனே''

என்று கூறுகின்ளுர். இப் பாடலில்பல பாடவேறுபாடு கள் உள்ளன என்று இக்காலத்தார் கூறுவர். இப்பாட்டுக்கு ' ஆற்று வெள்ளமும் பக்ஷிகளும் மிருகங் களும் விலைமாதருடைய மனமும் ஒருவழியிற் செல்லும் படி அரசு செய்தவன்- நீக்குதற்கரிய பெரும்புகழைப் படைத்த தசரதனென்னும் பெயருடையவள்ளலாகிய உறைபூட்டும் வேலாயுதத்தையுடைய அரசர்க்கரசன்'' என்று பெரியார் கிருஷ்ணசாமி முதலியார் உரை கூறி யுள்ளார். பின்னர் இவ்வுரைக்கு நயவுரையாக,

"வெள்ள மொரு வழியோடல் - அம்மன்னவனுட்டில் மாதம் மும்மாரி பெய்வதினுல் விளைவுக்கு இவ்வெள்ளம் வேண்டுவதின்றி நேரே சென்று கடலிற் சேருமெனவும் பறவைகளும் விலங்குகளும் வேடர்கள் முதலான பேருக்கஞ்சி யலைந்து திரியாமலொருவழியே செல்லு மெனவும், புலி - பசு - மான் முதலியவை யொன்றற் கொன்று விரோதமின்றி யொருவழியிற் செல்லு மெனவும், கருடன் பாம்பு முதலியவற்றையும் அவ் வாறே விரோதமின்றி யொருவழியிற் செல்லுமெனவும் கண்டு கொள்க. இதனை 'பொருதுறை சேர்வேலினுய் புலி போத்தும் புல்வாயும் - ஒரு துறையினிருண்ணவுல காண்டான் என்னுஞ் செய்யுளானு முணர்க.

வேசையருள்ளம் முன் வந்தவனிடத்தில் பணயம் வாங்கிக்கொண்டு பின் வருகிறவரிடத்தில் பணயம் வாங்காமல் முன் வந்தவனிடத்தே மனஞ் செல்லுமென வும் கண்டு கொள்க" என்று கூறியுள்ளார். இவ்வாறு கருத்துரை நயவுரை, ஒப்புமைப் பாடல்கள் ஆகியவை இப் பெரியாரின் உரையில் உள்ளன.

## முதற் பாட வேறுபாடு

இவ்உரைப் பதிப்புக்குப் பின்னர், 1864, 1870, 1873, 1876, 1884, 1885, போன்ற பல ஆண்டு களில் பல பெரியார்களால் பதிப்பிக்கப் பெற்றது. 1910-ஆம் ஆண்டு பி. ஆர். கிருஷ்ணமாச்சாரியார்- பண்டிதசவரிராய பிள்ளை என்ற இரு பேரறிஞர்கள் இந் நூலைப் பதிப்பித்தனர். இப் பதிப்பில் இதுவரை இல்லாத பாட வேறு பாடுகள் குறிக்கப்பட்டுள்ளன. 1918-ஆம் ஆண்டு கனக சுந்தரம் பிள்ளை அவர்கள் குறிப்புரையுடன் பதிப்பித்தனர். 1932-ஆம் ஆண்டு,

தமிழ்ப் பேரறிஞர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் பல படிகளை ஆராய்ந்து யுத்த காண்டத்தின் முதல் மூன்று படலங்களைப் பதிப்பித்தார். 1937-ஆம் ஆண்டு தமிழறிஞர் எஸ். வையாபுரிப்பிள்ளையும் பெ. நா. அப்புசாமி அவர்களும் பாலகாண்டம் முதல் ஏழு படலங்களைப் பதிப் பித்தனர்.

1942-1954 ஆண்டு அரும் பெரும் முயற்சியோடு ஆழ்வார்திருநகரி படிகளைக் கணித்து பட்சிராஜ அய்யங்கார் என்னும் பெரியார் மிகச்சிறப்பாக பாலகாண்டம் முதல் யுத்த காண்டம்வரை பதிப்பித்துள்ளார்.

கம்பராமாயணப்பதிப்புக்களுள் இன்று தலைசிறந்தவற்றுள் ஒன்ருக விளங்குவது திரு. வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியாரின் பதிப்பாகும். உரையுடன் கூடிய இப்பதிப்பு தமிழகத்தில் பல் வேறு பதிப்புக்கள் தோன்றத் துணை செய்துள்ளது. பாட வேறுபாடு. இடைச் செருகல் பாட்டுக்கள் ஆகிய அனைத்தையும் ஆராய்ந்து இப் பதிப்பு பதிப்பிக்கப் பெற்றுள்ளது. பாலகண்டம் முதல் யுத்த காண்டம் வரையுள்ள இப் பதிப்பு பல்வேறு ஏடுகளை ஆராய்ந்து பதிப்பிக்கப் பெற்றதாகும்.

கம்பர் காவியத்தை வ. வெ. சு ஐயர் (பாலகாண்டம் 1917) சே. சிவஞானம் பிள்ளை (பாலகாண்டம் முதல் யுத்த காண்டம்வரை 1920) போன்ற பெரியார்களும் பதிப்பித்துள்ளனர்.

**கம்பராமாயண சாரம்.**

வெ பா. சுப்பிரமணிய முதலியார் என்னும் தமிழறிஞர் கம்பராமாயண சாரம் என்ற தலைப்பில் கம்பராமாயணச் சுருக்கத்தைப் பதிப்பித்துள்ளார்.

தமிழறிஞர் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் தான் சிறுகச் சிறுக வெளியிட்ட கம்பராமாயண இன் கவித் திரட்டையே கம்பராமாயணச் சாரம் என்று தலைப்பிட்டு பதிப்பித்துள்ளார். ஏறத் தாழப் பதி னு யிரத்துக்கு மேற்பட்ட கம்பராமாயணப் பாடல்களில் ஏறத் தாழ ஆயிரத்தைந்நூறு அரும்பாடல்களை எடுத்து அவற்றை எளிமையாக்கி பதிப்பித்துள்ள இவரின் பெருந்தொண் டினைப்பற்றி டாக்டர் உ. வே. சாமிநாதையர். ' கம்பராமாயணம் முழுவதையும் படித்து இன்புறுவ தென்பது யாவருக்கும் இயலாத காரியம். முதலியாரவர் களுடைய கம்பராமாயண சாரமோ எல்லோருக்கும் பயன்படும் முறையில் அமைந்திருக்கிறது. தாம் தேர்ந்தெடுத்துள்ள கவிகளுக்குப் பொழிப்புரையும் கருத்தும் விசேடவுரையும் இந் நூலில் முதலியாரவர்கள் அமைத்திருக்கிறார்கள். கம்பராமாயணப் பாடல் முழுவதும் இல்லாவிடில் கதைத் தொடர்பு அறுகபடி இடையிடையே உள்ள வரலாறுகளை எளிய அழகிய வசன நடையில் எழுதியிருப்பதால் இதனைப் படிப்பவர் களுக்கு ஒருவாறு கம்பராமாயணம் முழுவதிலுமுள்ள அமைப்பு விளங்கும்'' என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்களின் இம் முயற்சி தமிழ் இலக்கிய உலகிற்கு ஒரு புதிய முயற்சியே எனலாம். இன் கவிகளைத் தொகுத்து அளித்திருக்கும் இம் முயற்சியைப் பின்பற்றியே பிற்காலத்தில் டாக்டர் சேதுப் பிள்ளை. தமிழ்க்கவிதைக்களஞ்சியம், செஞ்சொற் கவிக்கோவை. பாரதியார் இன் கவித்திரட்டு போன்ற நூல்களை வெளியிட்டார் எனலாம். வெ. ப. சுப்பிரமணிய முதலியார். ஒவ்வொரு பாட்டிற்கும் தலைப்பு, பாட்டு, கொண்டு கூட்டு பொருள், குறிப்பு. கதைத் தொடர்ச்சி

முதலிய குறிப்புக்கள் கொடுத்திருப்பது, கம்ப ராமாயணச் சாரத்தில் தனி அழகினைக் கூட்டுகிறது எனலாம். சிற்சில பாடல்களுக்குப் பாட வேறுபாடு களும் கொடுக்கப் பட்டுள்ளன.

டி. கே. சி. பதிப்பு,

திரு டி. கே. சிதம்பரநாத முதலியார் கம்ப ராமாயணத்தைப் பதிப்பித்த அறிஞர்களுள் ஒருவர். இப் பெரியார் கம்பராமாயணத்தில் எத்தனையோ பல இடைச் செருகல்கள் நுழைந்து விட்டன என்றும். அவற்றை எல்லாம் களைந்து உண்மை மூல பாடப் பதிப்பு பதிப்பிக்க வேண்டும் என்று எண்ணி உண்மை மூலப் பாடப் பதிப்பு பதிப்பித்தார்கள், இவர்களின் இப்பதிப்பினைக் கூர்ந்து நோக்கிய திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் டி கே. சிதம்பரநாத முதலியார் அவர்களையும். அவர்களின் பதிப்பினையும் பின் வருமாறு கூறுகின்றார். "ரசிகமணி டி. கே. சி. முதலியார் அவர்கள் கம்பனை ஆழ்ந்து கற்றவர்கள் செய்யுளோசையை நுனித்தறிவதில் பெருந்திறல் வாய்ந்தவர்கள், கவிதை யின்ப நுகர்ச்சியில் எப்பொழுதும் திளைத்து வருபவர் கள், ஆங்கில இலக்கிய அறிவு நன்கு பெற்றுள்ளவர்கள். செய்யுட் சுவையைப் பகிர்ந்தளிப்பதிலும் "கற்ற செலச் சொல்வதி' லும் பேராற்றல் படைத்தவர்கள். நாணயப் பரிசோதகனைப் போல ஓசையின் தன்மைகொண்டே, இது கம்பன் பாட்டு, இது கம்பன் பாட்டு அல்ல என்று துணிதலில் பெருந்தெளிவுள்ளவர்கள் இவர்கள் தங்களது இயற்கையான அறிவாற்றலாலும். கலை யுணர்ச்சியாலும், இப்பொழுதுள்ள இராமாயணப் பதிப் பென்னும் குப்பையிலே மறைந்து கிடக்கும் நன்மணி களைப் பொறுக்கி எடுத்துக் கோத்துள்ளார்கள் பால

காண்டத்தில் இவர்கள் பொறுக்கி எடுத்துள்ளவை 167 கவிதைகளே. தற்காலப் பதிப்புக்களில் உள்ள செய்யுட்களில் எட்டில் ஏழு பங்கிற்குமேல் கம்பனது கவிதைகள் அல்ல வென முதலியாரவர்களால் நீக்கப் பட்டுள்ளன. இப் பதிப்பில் தொடர்ச்சி யென்பது இருக்கமுடியாது பாலகாண்ட கதை பற்றிக்கம்பன் பாடிய மற்றைப் பாடல்களெல்லாம் அழி வெய்தி விட்டன. இவற்றிற்குப் பதிலாக இப்போது காணப் படுவன அனைத்தும் இடைச் செருக்கல் கள்'' என்பது திரு முதலியாரவர்கள் கருத்து இவ்வாறு கூறிய அளவில் இவர்களது முயற்சியை முற்றக்கூடியதாகாது: தெரிவுச் செய்யுட்களில் பல இவர்களது உயரிய கவிதை-லட்சி யத்திற்கு ஒத்தொழுகவில்லை. இவற்றைச் செம்மை யாக்கி இவர்கள் கருத்துப்படிக் கம்பன் பாடல்களாக அமைக்கும் பொறுப்பும் முதலியாரவர்களைச் சார்ந்து விட்டது. ஆகவே அங்கங்கே திருத்தம் செய்ய வேண்டும் அவசியம் ஏற்பட்டது. இவர்கள் வெளி யிட்டுள்ள பாலகாண்ட பதிப்பு முதலியன இவ்வாறு திருத்தப்பட்டவையே. இவ் வகைப் பதிப்பினைத் 'தெரிவுத் திருத்தப் பதிப்பு' என்று நாம் கூறலாம். ஆனால் இவர்கள் உண்மை மூல பாடப் பதிப்பு' என்பார்கள்'' என்பது டி. கே. சியின் பதிப்பினைப் பற்றிய வையாபுரி பிள்ளையின் கூற்றாகும்.

கம்பராமாயணத்தில் வரும் பாடல்களின் முழு எண்ணிக்கை 10576 ஆகும் (வை மு கோ. பதிப்புப் படி) பாலகாண்டத்தில் 1897 பாடல்களும். அயோத்தியா காண்டத்தில் 1224 பாடல்களும், ஆரண்ய காண்டத்தில் 1204 பாடல்களும் கிட் கிந்தா காண்டத்தில் 1050 பாடல்களும் சுந்தரகாண்டத்தில் 1348 பாடல்களும்

யுத்தகாண்டத்தில் 4358 பாடல்களுமாகும். பத்தாயிரத்திற்கு மேற்பட்ட இப் பாடல்களுள்ளும் டி. கே. சி. அவர்கள் கம்பர் பாடியதாகக் கொண்டுள்ள பாடல்கள் 1500. மற்றைய பாடல்கள் எல்லாம் இடைச்செருகல்கள் என்றே டி. கே. சி. அவர்கள் கருதுகின்றார்கள். இடைச் செருகல் உள்ள பாடல்கள் பல இருக்கலாம். அதற்காக 1500 பாடல்கள் போக எஞ்சியவை அனைத்தும் இடைச்செருகல்கள் என்று கூற இயலாது. பொருத்தமற்ற இடங்களில் பொருள் விளக்கம் இல்லாத முறையில் கூறியதையே கூறும் வகையில் சில பாடல்கள் உள்ளன. அவற்றைப் படித்தாலே அவை இடைச்செருகல் என்று நன்றாக விளங்கும்.

டி. கே. சி. யின் திருத்தம்.

டி. கே. சி. கம்பராமாயணத்தை தெரிவிலேப் பதிப்புச் செய்ததோடு. சில பாடல்களுக்குத் திருத்தமும் செய்துள்ளார். எடுத்துக்காட்டாக,

''பாகத்தில் ஒருவன் வைத்தான்
பங்கயத்து இருந்த பொன்னை
ஆகத்தில் ஒருவன் வைத்தான்
அந்தணன் நாவில் வைத்தான்
மேகத்தில் பிறந்த மின்னை
வென்ற நுண் இடையை நீயும்
மாகத் தோள் வீர! பெற்றால்
எங்ஙனம் வைத்து வாழ்த்தி''

என்ற இப்பாடலில் வரும் ''பிறந்த மின்னை'' என்னும் சொற்றொடரை ''மிளிரும் மின்னை'' என்று திருத்திப் பதிப்பிட்டார்.

''தாளுடை மலருளான்
தந்த அந்தமில்
நாளுடை வாழ்க்கையான்
நாரிபாகத்தன்
வாள்உடைத் தடக்கையன்
வாரிவைத்த வெங்
கோள் உடைச் சிறையினன்
குணத்தின் குன்றனன்''

என்ற இப்பாட்டில் வரும் "கோளுடைச்சிறையினன்" என்பதை ''கோளுடைச் சிரசினன்'' என்று திருத்தி வெளியிட்டுள்ளார். கோளுடைச் சிறையினன் என்பதற்கு, மக்களுக்கு நன்மை திமைகளைத் தம்மாட்சியால் உண்டாக்குகின்ற கோள்களையே (கிரகங்களை) சிறை வைத்த சிறப்பினன்'' என்று பொருள்கொண்டுள்ளனர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார். டி. கே. சி. 'கோளுடைச் சிரசினன்' என்பதற்கு ''பிரகாசம் கொண்ட நவக்கிரகங்களையும் நக்ஷத்திரங்களையும் வாரிக் குவித்து வைத்த மாதிரியுள்ள கிரீடத்தைத் தலையில் சூடியவன்'' என்று பொருள்கொண்டுள்ளார். இதைப் போல் இன்னும் எத்தனையோ பல திருத்தங்கள் இவரது பதிப்பில் உண்டு.

## எதிர்ப்பும் உண்டு.

டி. கே. சியின் கம்பராமாயணப் பதிப்புக்கும் திருத்தத்திற்கும் எதிர்ப்புக்கள் மிகப் பலவாக இருந்தன. கம்பர் தமிழ் இனத்திற்குத் தீங்கு விளைவித்துள்ளார் என்று கூறிய பகுத்தறிவு இயக்கத்தினரும், டி. கே சியின் பதிப்பு முறையினையும், திருத்த முறையினையும் எதிர்த்தனர். இந்த எதிர்ப்புக்களை யெல்லாம்

கண்டு டி. கே. சி. கலங்கவில்லை இதனை டாக்டர் சி. ராஜகோபாலாச்சாரியார் கம்பர் தரும் இராமாயண முன்னுரையில் டி. கே, சியை ஒரு கவிஞர் மட்டுமல்ல ஒரு வீரர் என்றே நான் சொல்லுவேன். பல புலவர்களை எதிர்த்துக் கடைசிவரையில் தலை குனியாது போர்க்களத்தில் நின்றவர். நாம் படித்து வந்த பாடல்களுக்கும் இந்தப்பாடல்களுக்கும் ஒரு வித்தியாசமும் காணுத நம்மைக் கேட்காமல் இந்தப் பாடல்களை நீங்கள் எப்படி 'செருகு' என்று சொல்லிவிடலாம்? திருத்துவதும் தள்ளி விடுவதும் அபாயகரமான காரியம் என்று வாதாடி டி. கே. சி. அவர்கள் செயலை ஒப்புக்கொள்ளாதவர்கள் பலர்'' என்று குறிப்பிட்டுள்ள கருத்து இங்கு நினைக்கத்தக்கது.

பெருஞ் சுவைஞர்.

எதிர்ப்புக்களுக்கு அஞ்சாத பெருஞ் சுவைஞரான டி. கே சி. யைத் தமிழுலகம் ரசிகமணி என்றே போற்றிப் புகழ்கின்றது இவர் கம்பரது கவிதை அழகை அள்ளி அள்ளிக் குடித்ததோடு பிறருக்கும் கொடுத்து வந்தார். கம்பர் கைவண்ணத்தில் அமைந்துள்ள நலங்களை—நயங்களை இனிய எளிய தமிழில் எடுத்துக்கூறி கேட்போரை இன்பக் கிரக்கத்தில் ஆழ்த்திவிடுவார். தேனுக்குள் விழுந்த வண்டாகத்தான் இவர்களின் வாயால் கம்பர் பாநலங்களைக் கேட்டவர்கள் தவிப்பார்கள். எதுகைநயம், மோனை அழகு இனிய சொற்றொடர் கருத்துச் செறிவு, ஆழமான பொருள் அமைப்புக்கள் அத்தனையும் சொல்லிச்சொல்லி மகிழ்வதோடு பிறரையும் இனிமையோடு எடுத்துச்சொல்லவைத்து விடுவார் இது இவருக்குக் கலைமகள் கொடுத்த தனிப் பரிசு

டி. கே. சியின் தெரிவு திருத்தப் பதிப்புக்குப் பின்னர் கம்பர் கவிதைக் கோவை என்று மூன்று தொகுதிகளை திரு. சு. சே. சுந்தரராஜன் அவர்கள் பதிப்பித்தார்கள்.

கம்பராமாயணத்துக்குத் தெளிவான பதிப்பு இல்லை என்று அடையாறு கலா க்ஷேத்திரத்தினர் தெளிவான பதிப்பினைப் பதிப்பிக்க முற்பட்டனர். பற்பல ஏடுகளை ஆராய்ந்து உரைக் குறிப்புக்களோடு கம்ப ராமாயணத்தினைப் பதிப்பித்தனர். இவர்களின் முயற்சி நடந்து கொண்டிருக்கும் பொழுது அண்ணாமலைப் பல்கலைக் கழகம் இம் முயற்சியில் ஈடுபடலாயிற்று.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

1952-ஆம் ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் கம்பராமாயணப் பதிப்பு முயற்சி மேற்கொள்ளப் பட்டது. பல்கலைக் கழகத்தில் துணை வேந்தராயிருந்த டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியார் அவர்களின், விருப்பத்தால் நிறைவேற்றப்பட்ட இம்முயற்சிக்குத் தமிழகத்தில் பெரும் வரவேற்பு கிடைத்தது. தஞ்சை சரசுவதி மகால், மதுரைத் தமிழ்ச்சங்கம், சென்னை கீழ்த்திசை கையெழுத்துப் படிகளின் நூல் நிலையத்தார் ஆகியோர், தங்களிடமிருந்த ஏட்டுப்படிகளைக் கொடுத்துதவ முன்வந்தன. பணிதொடங்கித் துரிதமாக வளர்த்து வரும் நிலையில், நோய்வாய்ப்பட்ட காரணத்தால், துணை வேந்தர் பதவியிலிருந்து டாக்டர் சண்முகம் செட்டியார் விலகி, பின்னர்ச் சில திங்களுக்குள் இறைவனடி சேர்ந்தார்கள்.

எனவே, டாக்டர் சர். சி. பி: இராமசாமி ஐயர் அவர்கள் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராக

நியமிக்கப்பெற்றூர்கள். இவர்கள் துணை வேந்தராக நியமிக்கப்பெற்றதும், கம்பராமாயணப் பதிப்பில் தனிக்கருத்துச் செலுத்திஞர். அண்ணுமலையில் நடந்து வந்த பணி அவருக்குப் பெருமகிழ்ச்சியைக் கொடுத்தது. உடனே, அடையாறு டாக்டர் உ வே. சாமிநாதையர் நூல் நிலையத்தில் கம்பராமாயணப் பதிப்புப் பணியில் ஈடுபட்டிருந்த பெரியார்களையும் உடன் சேர்த்து ஒத்துழைக்குமாறுச் செய்தார். ஒத்துழைப்பின் பயனுகக் கம்பராமாயணப்பதிப்புப்பணி துரிதமாகியது.

திருமதி உருக்குமணிதேவி, திரு. ஆதிசேஷையா, திரு. A இராமநாத பிள்ளை, பேராசிரியர் ஜி. சுப்பிரமணிய பிள்ளை, திரு. R விசுவநாதன், பேராசிரியர் திரு, K. சுவாமிநாதன், திரு S. சச்சிதானந்தம் பிள்ளை, திரு. R. இராமசுவாமி நாயுடு ஆகியோர் இப்பதிப்புக் குழுவில் பணியாற்றினர். சுந்தரகாண்டத்திலிருந்து இக் குழுவினர் தங்களது அரிய பணியினைத் தொடங்கினர். ஏறத்தாழ எழுபதுக்கும் மேற்பட்ட ஏடுகளை நுணித்தறிந்து சுந்தரகாண்டத்தின் முதற் பதிப்பினை பல்கலைக் கழக வெள்ளி விழாவில் 1955-ஆம் ஆண்டு வெளியிட்டார்கள்.

1956-ஆம் ஆண்டு சுந்தரகாண்டம் இரண்டாம் பகுதி வெளிவந்தது. சுந்தரகாண்டம் இரண்டாம் பதிப்பிற்கு, பேராசிரியர் ஜி. சுப்பிரமணிய பிள்ளை, பேராசிரியர் மு. இராகவையங்கார், திரு. ந. கந்தசாமிப் பிள்ளை. திரு. தி. கி இராகவையங்கார் போன்ற பெருமக்கள் குறிப்புரை எழுதியுள்ளார்கள். சுந்தரகாண்டம் இரண்டாம் பதிப்பு வெளியிடும்பொழுது, அடையாறு டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தார் தனியாகப் பிரிந்து, தனிப்பதிப்புப் பதிப்பிக்கத் தொடங்

னர். இதனால் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் தனிமை யாக வேறு பதிப்பாசிரியர் குழுவை நியமித்தது. இக் குழுவிற்குப் பேராசிரியர் டாக்டர் ரா. பி சேதுப்பிள்ளை தலைவர். குழுவில், இராவ்சாகிப் திரு. மு. இராகவையங்கார் டாக்டர் தெ. பொ மீனாட்சிசுந்தரனார். G, சுப்பிரமணிய பிள்ளை, பேராசிரியர் லெ. ப கரு இராமநாதன் செட்டியார், டாக்டர் A. சிதம்பரநாதன் செட்டியார், திரு பி. ஸ்ரீ ஆச்சார்யார் திரு. ந கந்தசாமிப் பிள்ளை. திரு. S. இராமசாமி நாயுடு, திரு. A C பால் நாடார், திரு T. K. இராமநுஜ ஐயங்கார் ஆகியோர் பங்கு பற்றினர்.

இப்பேரறிஞர்கள் குழுவிலிருந்து காலப்போக்கில் சிலர் விலகியதாலும், இறைவனடி சேர்ந்ததாலும், பின்னர்திரு. புருஷோத்தம நாயுடு, தமிழ்ப் பேரறிஞர் மே. வி. வேணுகோபாலப் பிள்ளை ஆகியோர் பங்குபற்றி பணியாற்றினர். டாக்டர் சேதுப் பிள்ளை இறைவனடி சேர்ந்தபின்பு, குழுவிற்குப் பேராசிரியர் ஜி. சுப்பிரமணிய பிள்ளை தலைமை தாங்கினார்.

இப் பெரியார்கள் தங்களுக்குள் ஒருமுறை அல்லது இருமுறை அல்லது மூன்றுமுறை கூடி பாட வேறு பாடுகளை ஆராய்ந்து செம்மைப் படுத்துவர். பின்னர் நல்லபாடம் என்று தெளிந்தபின்னர் பாடல்களுக்கு உரை எழுதி பதிப்பிப்பர்.

**மற்றவற்றைவிடச் சிறப்பு:**

மற்ற பதிப்புக்களைவிட அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு அனைத்திலும் சிறந்து விளங்குகிறது எனலாம். பாடல்களை இரண்டு வகையாகப் பதிப்பித் திருக்கிறார்கள். இப்பதிப்பில் கம்பரது கவிச்சுவையினை

நன்கு சுவைக்கவேண்டுவதற்கும் செய்யுளோசை கெடாமல் இருக்கவேண்டும் என்பதற்கும் சந்திபிரிக்காமல் அப்படியே ஒரு பாடல் பதிப்பிக்கப்பட்டிருக்கும். இதே பாடல் பின்னர் சந்திபிரித்து முழுச்சொற்களாக பதிப்பிக்கப்பட்டிருக்கும். இப்படிச் சந்திபிரித்திருப்பதால் எல்லோருக்கும் படிப்பதற்கும் பொருள் காண்பதற்கும் எளிமையாக இருக்கும். எடுத்துக்காட்டாக,

'மற்ற வன்சொன்ன வாசகங்
கேட்ட லு மகனைப்
பெற்ற வன்றினும் பிஞ்ஞகன்
பிடித்தவப் பெருவில்
இற்ற வன்றினு மெறிமழு
வாளவ னிழுக்கம்
உற்றவன்றினும் பெரியதோ
ருவகைய ளுனன்''

என்ற இப்பாடலை

''மற்று அவன் சொன்ன வாசகம் கேட்டலும் மகனைப்
பெற்ற அன்றினும் பிஞ்ஞகன் பிடித்த அப்பெருவில்
இற்ற அன்றினும் எறிமழு வாளவன் இழுக்கம்
உற்ற அன்றினும் பெரியது ஓர் உவகையன் ஆனன்''

என்று பிரித்துப்பிரித்து பதிப்பித்திருப்பதைக்காணலாம்

ஒவ்வொரு படலத்தின் தொடக்கத்திலும், படலத்தின் சுருக்கம். நுண்பொருள் படலப்பொருட் சிறப்பு ஆகியவை கொடுக்கப்பட்டிருக்கும். கம்பருக்கும் வான்மீகருக்கும் உள்ள வேறுபாடுகள் எடுத்துக்காட்டப்பட்டிருக்கும்.

பாடலுக்குப் பொருளும், குறிப்புரை என்ற ஆராய்ச்சி யுரையும் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பில் தனிச் சிறப்புடன் இலங்குகின்றன.

மிகைப் பாடல்களையும் இப்பதிப்பில் காணலாம்.

பிற்சேர்க்கையாக ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகள், அச்சுப்படிகள் அவற்றின் குறியீடுகளும். பாட வேறுபாடுகளுக்கும் கொடுக்கப்பட்டிருப்பது இப் பதிப்புக்குத் தனி அழகைக் கொடுக்கிறது எனலாம்.

**உரைச் சிறப்பு:**

இத்தகைய சிறப்புக்களைவிட இப்பதிப்புக்கு இன்னுமொரு தனிச்சிறப்பும் உண்டு. அது இப்பதிப்பு தமிழில் துறைபோகிய அறிஞர்களின் பொருளுரை குறிப்புரைகளைக்கொண் டிலங்குவதுதான். இப்பதிப்புக்கு பொருளுரை குறிப்புரை வழங்கிய பெரியார்கள் பலர். அவர்களுள் ஒருவர் ராவ்சாகேப் மு. இராகவ ஐயங்கார். சுந்தரகாண்டத்திற்குக் குறிப்புரை எழுதிய இப்பெரியார் தமிழ்மொழிக்குச்செய்துள்ள தொண்டுகள் அளப்பரியன. பெரும்புலவர் ந. கந்தசாமி பிள்ளை அவர்களும், சுந்தரகாண்டத்திற்குக் குறிப்புரை எழுதியுள்ளார்கள். கம்பராமாயணப் பதிப்புக் குழுவில் மிகச் சிறந்த பணியாற்றிய இவர்கள், குறிப்புரை எழுதும் பணியிலும் ஈடுபட்டது போற்றுதற்குறியது.

பேராசிரியர் ஜி. சுப்பிரமணிய பிள்ளை பதிப்புக் குழுவிலும் பணியாற்றிப் பின்னர், டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளைக்குப் பின்னர் பதிப்புக்குழுவின் தலைவராகவும் பணியாற்றி, பற்பல படலங்களுக்கு பொருட் சுவை சொற்சுவையோடு பொருளுரையும் குறிப்புரையும் எழுதியுள்ளார்கள். இவர்களது நுண்ணிய கருத்

துக்களை — நுண்மாண் நுழை புலத்தோடு எழுதிய குறிப்புரைகளைத் தமிழகம் பெற்றது அது செய்த நற்பேறேயாகும். பெரும்புலவர் தி. கி. இராமாநுஜ ஐயங்கார் அவர்களும் பல்வேறு படலங்களுக்கு உரை எழுதியுள்ளார்கள். இவர்களது பரந்த பட்ட தமிழறிவினை இவர்களது உரையில் கண்டுகளிக்கலாம். பதிப்புக் குழுவின் செயலாளராகப் பணியாற்றிய இப்பெரியார் கம்பராமாயணத்தைக்கசடறக்கற்றுத்தெளிந்தவர். ஒரு சொல்லைக் கொடுத்து. இச்சொல் கம்பராமாயணத்தில் எங்கு வருகிறது என்றால் உடனே தயங்காமல் கூறும் ஆற்றல் இவர்பால் உண்டு. இதனை ஒருமுறை யானே சோதித்துப் பார்த்துள்ளேன். இப்பெரியாரின் குறிப்பு உரையில் நாலாயிரத் திவ்விய பிரபந்தங்களின் மேற்கோள்கள் பலவற்றைக்காணலாம்.

பேராசிரியர் க.. வெள்ளைவாரணனர் அவர்களும் பல படலங்களுக்கு உரை எழுதியுள்ளார்கள். திருமுறைகளின் ஆராய்ச்சியிலும் கம்பராமாயணத்துக்கு. உரை எழுதுவதிலும் பங்குபற்றிய இப்பெரியாரின் தமிழறிவைச் சொல்லிட நாலாயிரம் நாவுகள் படைக்கவில்லை அந்த நான்முகன். பேச்சிலும் எழுத்திலும் தூய தமிழையே மேற்கொள்ளும் இப் பெரியாரை வாழும் தனித்தமிழ் மூதறிஞர்களுள் முதல்வர் என்றே குறிப்பிடலாம் இவர்களது நுண்ணறிவுசான்ற உரைத்திறனைத் தமிழகம் காண்பதற்கு ஒரு சான்று.

"வெய்தா கியகா னிடைமே வருநீர்
ஐதா தலினே வயலொன் றுளதோ
நொய்தாய் வரவே கழுநொய் திலனல்
எய்தா தொழியா னிதுவென் னைகொலாம்"
(அயோமுகிப் படலம், பா. 68)

என்றபாடலுக்கு பொருளுரையாக ''வெம்மையுடைய தாகிய கானகத்தே விரும்பிப் பருகுவதற்குப் பொருந் திய நல்ல தண்ணீர் வற்றி இல்லையாயினமையாலோ. அன்றி வேறு ஏதேனும் ஓர் இடையூறுதாயிற்றோ? விரைந்து வருதற்கேற்ற வேகத்திலும் தளர்ச்சியுடை யானல்லன் (ஆதலால்) வாராதிருக்கமாட்டான். இங்ங னம் தாழ்த்தமைக்குக் காரணம் யாதோ?'' என்று பேராசிரியர் வெள்ளைவாரணனார் எழுதியுள்ளார். இப் பாட்டில் வரும் மேவருநீர் என்பதற்கு ''விரும்பிப் பருகுதற்குப் பொருந்திய நல்ல தண்ணீர்'' என்று பொருள்கொண்டு ''மேவரு'' என்பதற்கு விருப்பம் பொருந்துதல் என்ற பொருள் உள்ளதா என்பதை ஆராய்ந்து குறிப்புரையில் மிகச்சிறந்த உரையினை உரைத்துள்ளார். அது மேவரு தமிழ்' (சீவ-1328) என்பதற்கு நாடக வழக்கும் உலகியல் வழக்கும் பொருந்துதல் வரும் அகப்பொருள்' என நச்சினார்க்கினி யர் கூறும் உரை விளக்கத்தைக் கூர்ந்து நோக்குங்கால் 'மேவுதல் வரு' என்னும் தொடரே 'மே வரு' என்ரு யிற்று என்பது அவர்கருத்தாதல் புலனும். மேவுதல், விரும்புதல், பொருந்துதல். ஐது—நுண்மை; ஈண்டு வர வரச் சுருங்கி இல்லையாதலைக் குறித்து நின்றது.

பேராசிரியர் வெள்ளைவாரணனார் அவர்களைப் போன்றே, திரு. செ. வேங்கடராம செட்டியார் அவர்க ளும், மிகச்சிறந்த தமிழ்ப் பெரும்புலவர்ளுள் ஒருவர். நுட்பமான அறிவு நலமும் திட்பமான கருத்து வளமும் கொண்டவர். கூரிய சிந்தனையும், சீரிய நெஞ்சும் இவர்க ளின் உடமைகள் எனலாம். சங்க இலக்கியங்களில் பெரும் புலமைபெற்ற இவரும் கம்பராமாயணத்தில் ஏறத்தாழ 50 படலங்களுக்கு உரை எழுதியுள்ளார்.

இவர்களது நுண்ணறிவு நலங்களை, இவர்களின், புனையா ஓவியம், பழந்தமிழ் நூல்களில் உயிர் வகைகள், முல்லையும் பூத்தியோ? போன்ற நூல்களில் தமிழகம் கண்டு மகிழ்ந்தாலும், கம்பராமாயணத்தில் வரும் மிகச்சிறந்த இவரது உரைகளுள் சான்ருக ஒன்றை மட்டும் தமிழகத்திற்குக் காட்டுவோம்.

அயோத்தியா காண்டத்தில் ஆறு செல்படலத்துக்கு இவர்கள் எழுதியுள்ள முன்னுரையினைத் தமிழகம் என்றும் போற்றிப் புகழும் என்பதில் ஐயமில்லை.

ஆறுசெல் படலத்திற்கு அழகிய முன்னுரை எழுதியுள்ள திரு. S வேங்கடராமச் செட்டியார் இப்படலத்தில் வரும் ஒவ்வொரு பாட்டிற்கும் மிகச்சிறந்த கருத்துரை வழங்கியுள்ளார், எடுத்துக்காட்டாக ஒன்று காண்போம்.

மல்கிய கேகயன் மடந்தை வாசகம்
நல்கிய தரிவையர் நடுவிற் கேகொலாம்
புல்கிய மலர்வடம் பூண்கி லாமையால்
ஒல்கிய ஒருவகைப் பொறை உயிர்த்தவே.
(ஆறுசெல். பாட்டு 2372)

கைகேயிதான் இராமனைக்காட்டிற்கு அனுப்பினுள் என்று உலகமெலாம் அவளைக் கொடியள் என்று தூற்றுகின்றது. பழித்துப்பேசி இழித்து ஒதுக்குகின்றது. ஆயினும் கைகேயி நல்லவள் என்றும் சிலபேர் கூறிப் போற்றினர் கைகேயியால் தங்களுக்கு நன்மை கிடைத்தது என்று அந்தச்சிலர் கூறினர். இக்கருத்தினைச் செட்டியார் அவர்கள் கீழ்க்கண்டவண்ணம் மிகச்சிறப்பாக விளக்கியுள்ளார்.

வளமிக்க கேகயநாட்டு மன்னன் மகளாகிய கைகேயின் வரமாகிய சொல் நன்மை செய்தது பெண்டிரின் இடைகட்கு மட்டுமே போலும்! ஏனெனின்? நெருங்கிய மலர்மாலையையும், முத்துவடங்களையும் அவர்கள் பூணாமையால், முன்பு பூண்டு மெலிந்த அவர் இடைகள் ஒருவகைப் பாரத்தை நீங்கப்பெற்றன, ஆதலின்.

இதனால் கைகேயியின் வரம் பயனற்றமை கூறுவார் போல மகளிர், மலரும் வடமும் பூணாமல் சென்றமை கூறினார். மல்கிய கேகயன் என்றது வளமிக்க கேகய நாட்டையுடையவன் என்னுங் கருத்தினது. மடந்தை-கைகேயி. அவள் வாசகமாவது, இராமன் காடாளப் பரதன் நாடாளப்பெற்ற வரமாகிய சொல். அச்சொல்லால் அரிவையர் இடைகள் பொறையுயிர்த்தன என்றது பரம்பரை ஏதுவாகக் கூறியது. 'மாதவி மடந்தை கானற்பாணி கனகவிசயர் தம் முடித்தலை நெறித்தது' (சிலப். 27 : 49–51) என்புழிப் போல. மாதவியின் பாணி, தலைநெரித்தது. இவள் வாசகம் பாரத்தால் இடை நெரியாமல் நல்கியது என்க. கைகேயியின் வரத்தால் இராமன் கானம் புகுந்தான்; அதனால் தயரதன் வானம் புகுந்தான்: அவன் வானம் புரிந்தமையின் வரத்தால் உரிமைபெற்ற பரதனை முடிசூடுமாறு பெருமக்கள் வற்புறுத்துகின்றனர். அவர்கள் வற்புறுத்தலால் முடிசூடுதல் உரியவன் இராமனே ஆதலின் அவனை அழைத்து வருவோம் எனப் படையுடன் பரதன் புறப்படுகின்றான்; அவனுடன் புறப்பட்ட மகளிர் மன்னனையும் இராமனையும் பிரிந்த துன்ப-உணர்ச்சியால், மலரும் வடமும் முதலியன பூணாது செல்கின்றனர், அவர்கள் பூணாமையால் அவர்களுடைய

இடைக்கு பாரம் குறைகின்றது: எனப் பரம்பரை ஏதுவை விரிக்க. கைகேயிபெற்ற வரத்தின்படி பரதன் முடிசூடுதல் நிகழா என்பது பரதன் புறப்பட்டால் புலப்படுதலின், அவள் வரத்தாலே வேறு யாருக்கும் பயன் இல்லை; மகளிர் இடைக்குச் சிறிது பாரம் குறைந்தது அவ்வளவே எனபதை நகைச்சுவை தோன்றப் பெற வைத்த திறம் காண்க. மகளிர் இடை பொறை யுயிர்க்குமாறு அவள் வாசகம் நல்கியது என்றது அவர்கள் மலர் முதலிய சூடாமல் வருந்திச் செல்வ தற்கு ஏதுவாயிற்று என்பது கருத்தாகலின்' புகழ்வது போலபழித்ததாயிற்று.

மிகச்சிறந்த இவ் வுரையினைப் போன்றே இவர் எல் லாப் பாட்டுக்கும் உரை எழுதியுள்ளார். இவர் மந்திரப் படலம் முதல் திருமுடி சூட்டுப் படலம் வரை ஏறத்தாழ 40 படலங்களுக்கு உரை எழுதியுள்ளார்.

இப் பேராசிரியப் பெருமக்களைத் தவிர, இன்னும் பல பேரறிஞர்கள் இந்நூலுக்கு உரை எழுதியுள்ளார் கள். அவர்களுள் ஒருவர் பேராசிரியர் பி. எஸ். இராமாநு சாச்சாரியார். இவர் வடமொழியிலும் தென் மொழியி லும் வல்லுநர். சாணக்கியரின் கௌடில்யத்தைத் வட மொழியிலிருந்து தமிழ்மொழியில் மொழி பெயர்த்தவர். இவர் ஏட்டு படிகளைப்பார்த்து மூலபாடத்தை எழுதும் திருப்பணியில் ஈடுபட்டிருந்தார். ஏடுகளைப் பார்த்து எழுதுவதில் இன்று தமிழகத்தில் இணையற்ற விளங்கு பவர். ஏடுகளைப்பார்த்து எழுதும் பணியில் ஈடுபட் டிருந்து எனக்கும். திரு. ந. வீ. செயராமன், திரு. இராமச்சந்திரன் ஆகியோருக்கும் தோன்றாத் துணை யாய்த் துலங்கியவர். இப் பெரியாரும் கம்பரது கவிதைக்

களஞ்சியத்தில் அமைந்துள்ள சிற்சில படலங்களுக்கு உரை எழுதியுள்ளார். இன்னும் பேராசிரியர் உ. பழநி, அவர்களும் உரை எழுதியுள்ளார்கள்

கம்பராமாயண ஏட்டுப்படிகளைப்பார்த்து எழுதும் திருப்பணியில் ஈடுபட்டவர்கள் பலர். மகா வித்துவான் ச. தண்டபாணி தேசிகர் கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர் வை சுந்தரேச வாண்டையார், திரு. பி. எஸ். இராமாநுசாச்சாரியார். திரு. திருநாவுக்கரசு, திரு. ந. வீ. ஜெயராமன், திரு. சோமஇளவரசு. திரு. ச. கணபதி ராமன் திரு. கே. இராமச்சந்திரன், ஆகியோராகும். இவர்கள் எல்லோரும் அண்ணமலைப் பல்கலைக் கழகத்தின் தமிழ் ஆராய்ச்சித் துறையிலிருந்து கம்பராமயணப் பணி செய்தவர்கள். இவர்களின் பெரு முயற்சியால் தான் கம்பராமாயணத்திற்கு மிகச்சிறந்த பதிப்பு இன்று வெளிவந்துள்ளது.

### மலிவுப் பதிப்பு:

கம்பராமாயணத்திற்குப் பின்னுளில் மலிவுப் பதிப்பும் வந்தது. சங்க நூல்களிலிருந்து பிற்காலப் பாடல் கள்வரை மர்ரே கம்பெனியார் மலிவுப் பதிப்பு வெளியிட்டனர். இவர்கள் தமிழுக்குச் செய்த தொண்டு அருந்தொண்டாகும்.

### கம்பர்கவியும் கருத்தும்:

தமிழக அமைச்சரவையில் எதிர்க்கட்சித் தலைவராக இருக்கும் திரு பி. எஸ். கருத்திருமன் கம்பர் கவியும் கருத்தும் என்ற பதிப்புநூல் ஒன்றை வெளியிட்டார். இந்நூலில் கம்பரது சுவை நலம் சான்ற பாக்களையும், அவற்றிற்குரிய உரைகளையும் கண்டு மகிழலாம். இவர்

கம்பர்பால் மிகுதியான ஈடுபாடு கொண்டவராகையால் இவரைக் ''கோவைக் கம்பர்'' என்று கூறுவர்.

கம்பராமாயண வசனம் என்ற நூலும் வெளிவந்துள்ளது. இதனைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக்குக் கழகத்தார் வெளியிட்டுள்ளார்கள்.

கம்பராமாயணப் பதிப்புக்கள் இன்னும் எத்தனையோ உண்டு. அவற்றையெல்லாம் கூறின் தனி நூலாகிவிடும்.

## 6. பலநோக்கம்.

கம்ப ராமாயணத்தை, இறைமை நோக்கம், எதிர் நோக்கம், புலமை நோக்கம், புரட்சி நோக்கம், பதிப்பு நோக்கம் ஆகிய நோக்கங்களில் நோக்கிப் பற்பல புதிய கருத்துக்களைத் தந்த பெரியார்களைத் தவிர, இன்னும் பல பெரியார்கள் இந்நூலைக் குறித்துப் பற்பல புதிய கருத்துக்கள் தந்துள்ளார்கள்.

### டாக்டர் தெ. பொ. மீ.

டாக்டர் தெ. பொ. மீ. கம்பராமாயணத்தில் தேர்ந்து தெளிந்தவர். கம்பரை, இந்தியப் பெருநாட்டின் பெருங்கவிஞர் என்று எங்கும் எதிலும் பேசிவரும் பெருந்தகையாளர்.

இப்பெரியார் கம்பராமாயணத்தையும் கம்பரையும் மலையாள மக்கள் ஏற்றிப் போற்றி வருகின்றனர் என்று தமது கம்ப நாடகம் என்ற கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார் ''மலையாள நாட்டார் கம்பரைச் சிவபெருமானேஎனப்போற்றுகின்றனர் கம்பராமாயணப் பாவக் கூத்தினைக் கடவுளைக் காட்டும் கூத்தாக அவர்கள்

கருதுவதும் இங்குப் புலனாகின்றது'' என்பது டாக்டர் தெ. பொ மீ யின் கூற்று.

கம்பராமாயணத்தை மலையாள நாட்டில் போற்றப் படும் வகையினை ''கம்பராமாயணம் மலையாளத்தில் மூன்று வகையாக வழங்கி வருகிறது. இதனைப் பலரும் கேட்க ஓதுவதற்கு எனப் பழங்காலத்திலிருந்து மக்கள் கட்டளைகள் ஏற்படுத்தி நிலங்களை ஒதுக்கி வைத்துள்ள னர். தமிழ் இராமாயணத்தினை மலையாள எழுத்தில் எழுதி இன்றும் அங்குப் பலர் பொதுமக்களைக் கூட்டி ஓதி வருகின்றனர். இஃது ஒருவகை திருவிழா முதலிய பொதுக் கொண்டாட்டங்களில் கம்பராமாயணத்தினை ஓதுவார் ஒருவரே பலவகைப் பாத்திரங்களாக இருந்து நடித்து வருவது மற்றொருவகை. மூன்றாம் வகை பாவைக் கூத்தாகும். இராமாயணத்தின் பலபல பகுதி களை நாடகமாக அமைத்து அங்கதன் தூது முதலியன வாகப் பாவைகள் கொண்டு நடித்துக் காட்டுகின்றனர். இவற்றைத் தனிதனியே அங்கதன் கூத்துக்கவி'' என் பது முதலான பெயரோடோ, ''கம்பராமாயணப் பாவைக் கூத்து'' எனப் பொதுவான பெயரோடோ வழங்கி வருகின்றனர்'' என்று எடுத்துக் காட்டி யுள்ளார்.

முன்னாளில் சேரநாடாகவும் இந்நாளில் கேரள நாடாகவும் விளங்கும் மலையாள நாட்டில் கம்பராமா யணம் இன்னும் கூத்து முறையில் நடித்துக் காட்டப் படுகின்றது என் இப்பெரியாரால் எடுத்துக்காட்டப் பட்ட செய்தி தமிழர்களுக்கே பெருமைதரும் செய்தி யாகும்

பிறமொழிகள் விளங்கும் பிறநாடுகளில் தமிழ்க் கம்பன் இன்னும் வாழ்கின்றான் என எடுத்துக்காட்டிய

இப்பெரியார் தமிழ் இலக்கியத்தில் அமைந்த கருவூலங்கள் (The Pageant of Tamil Literature) என்ற தமது நூலில் கம்பரைப்பற்றிய கட்டுரையில் கூறியுள்ள பல புதிய கருத்துக்களில் சிலவற்றை இங்கு காணலாம்.

கம்பர் பரிபாடலின் வழி நின்று அகலிகையைத் தூய்மையுள்ளவளாகவும், இந்திரனே தவறுக்குக் காரணம் என்றும் எடுத்துக்கூறியுள்ளார் என டாக்டர் தெ. பொ; மீ. குறிப்பிட்டுள்ளார்.

''மனிதனுகப் பிறந்த இராமன் படிப்படியாகப் பெற்றோர்களாலும், நண்பர்களாலும், முனிவர்களாலும் உயர்ந்த மனித நிலைக்கு உயர்ந்தான் என்று குறிப்பிடுகின்றார். கம்பர் இராமனை, இவ்வாறு பண்பாடு மிக்க உயர்ந்த மனித நிலைக்கு (Superman) கொண்டு வருவதற்கு திருமங்கையாழ்வாரின் குறிப்புக்கள் பயன் பட்டன'' என்று டாக்டர் தெ. பொ. மீ. குறிப்பிட்டுள்ளார். இத்தகைய புதிய கருத்துக்கள் இன்னும் எத்தனையோ இந்நூலில் உள்ளன.

பேராசிரியர் அ. சி. ரா.

பேராசிரியர் அ. சி. ராகவன் அவர்கள் கம்பராமயணத்தைக் கசடறக் கற்றுத் தெளிந்தவர்கள். கம்பனது காவிய நலங்களை இனிய தமிழில் கமழக்கமழ எடுத்துக்கூறும் பேராற்றல் படைத்தவர்கள். இப்பெரியார் கம்பரைத் ''தெய்வத் தமிழ்க் கம்பர்'' என்றே சிறப்பித்துப்பேசுவார். மறைந்த பெரியார் வ. வே. சு. ஐயரைப்போன்றே இப்பெருந் தகையாளரும், கம்பராமாயணத்தில் பற்பல பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்கள். கம்பராமாயணம் இன்று உலகோரால் போற்றப்படுவதற்கு இப்பெரியாரும் ஒரு காரணமாகும்.

சென்னை தலைமை அறங்கூர் அவையத்தின் நீதிபதியான திரு S. மகராஜன் அவர்கள் கம்பரைப் பிறமொழிப் புலவர்களோடு ஒப்பிட்டு உரைக்கும் முறையில் ஈடு இணையற்றவர். ரசிகமணி டி. கே. சியின் வழியில் நின்று கம்பராமாயணத்தைச் சுவைத்து, பிறருக்கு எடுத்துச் சொல்லிக் கேட்போரை இன்பக் கிரகத்தில் ஆழ்த்திவிடுவார்கள். இவர்களது கம்பராமாயணப் பேச்சுகனியிலும் கட்டிபட்ட கரும்பிலும் இனிக்கும்.

ஜீவா

பேராசிரியர் ஜி. சுப்பிரமணிய பிள்ளையின் கம்பராமாயணச் சொற்பொழிவினைக் கேட்ட பின்னர் ஜீவா (ஜீவானந்தம்) செந்தமிழ்க் கம்பரால் ஆருத அன்பு கொண்டார். கம்பரது கவிதைகளைத் தமது கூரிய நுண்ணறிவால் ஆராய்ந்து புதிய கருத்துக்கள் பலவற்றை வெளியிட்டார். தமிழ்ச் சமூதாயம் கம்பர்கண்ட சமுதாயம் போல் இலங்க வேண்டும் என்று எண்ணியவர் கம்பர்கண்ட சமுதாயப் பாடலை இவர்கள் அடிக்கடி மேடையில் முழங்குவார். அப்பாடல்

''வண்மை இல்லை ஓர் வறுமை இன்மையால்
திண்மை இல்லை நேர் செறுநர் இன்மையால்
உண்மை இல்லை பொய் உரை இலாமையால்
வெண்மை இல்லை பல்கேள்வி மேவலால்''

என்பதாம். இப்பெரியாரின் வழி நின்றுதான் எஸ். இராமகிருஷ்ணன் அவர்கள் சிறியன சிந்தியாதான் என்ற சிறந்த நூலை எழுதியுள்ளார்.

இப்பெரியார்களைத் தவிர, இன்னும் எத்தனையோ பேரறிஞர்கள் கம்பராமாயணத்தில் திறமைசான்றவர்க

ளாக விளங்குகின்றார்கள். தமிழ்ப் பெரும்புலவர் அ. நடேச முதலியார் கம்பரின் ஒரு பாட்டுக்கு எத்தனையோ மணிநேரம் சுவைததும்ப விளக்கவுரை யாற்றும் ஆற்றல் படைத்தவர்கள். சிலம்புச் செல்வர் ம. பொ. சியும் கம்பரப்பர் என்று தமது பெயரையே மாற்றிக்கொண்ட அ. கு ஆதித்தரும் கம்பர்பால் பெருங் காதல் கொண்டவர்களே!

**காரைக்குடி கம்பன் கழகம்:**

தமிழகத்தில் திருவள்ளுவர் கழகம் என்றால் எவ்வாறு தென்காசி திருவள்ளுவர் கழகத்தைக் குறிக்குமோ அதுபோல். கம்பன் கழகம் என்றால் அது காரைக்குடிக் கம்பன் கழகத்தையே குறிக்கும். காரைக்குடிக் கம்பன் கழகம் தமிழ்ப் பெருங்கவிஞர் கம்பருக்கு ஆண்டுதோறும் பங்குனித் திங்களில் அஞ்சலி செலுத்திக் கம்பரது காவியச் சுவைகளை மக்களுக்கு எடுத்துக்கூறி வருகின்றது, இக்கம்பன் கழகம் எத்தனையோ பல கம்பன் கழகங்கள் தமிழகத்தில் தோன்றுவதற்குக் காரணமாக விளங்கியது –விளங்குகிறது. சுருங்கக் கூறின் இதனைக்கம்பன் கழகங்களின் தாயகம் எனலாம்.

இக்கழகம் தோன்றத் துணைநின்று இதனைக் கண் போன்று காத்துவருபவர்கள் காரைக்குடி சா. கணேசன் அவர்கள். இப்பெரியார்தான் கம்பர்பால் வெறுப்புக் கொண்ட பல பெரியார்களைப் பின்னர் விருப்புக்கொள்ள வைத்தார்.

கம்பர்பால் பெரும் பற்றுக்கொண்ட இப்பெரியார் கம்பராமாயணத்துக்குத் திருந்திய பதிப்பு வரவேண்டுமென எண்ணினார்கள், இவர்களது எண்ணத்தை

இதயத்தில் ஏற்றியதாலோ என்னவோ செட்டிநாட்டி லிருந்து செ. முருகப்பா என்பவரால் கம்பராமாயணப் பதிப்பு ஒன்று வெளி வந்தது. அதோடு, செட்டி நாட்டு வேந்தர் ராஜா. சர். அண்ணாமலைச் செட்டியாரால் நிறுவப்பெற்ற அண்ணாமலைப் பல்கலைக் கழகம்தான் செவ்விய பதிப்பினை நல்லமுறையில் வெளியிட்டுக் கம்பன் மணத்தைப் பரப்பியுள்ளது.

இவ்வாறெல்லாம் கம்பன் புகழ்பாடி, கன்னித்தமிழ் வளர்த்த பெரியார்கள் தமிழகத்தில் ஏராளம் ஏராளம். அவர்களின் அருந்தொண்டைச் சொன்னாலும் வாய் மணக்கும். கேட்டாலும் செவி மணக்கும்.

